உங்கள் பிரதிகளுக்கு முந்துங்கள்!

# மங்கை



பிப்ரவரி '98 மார்ச் 1998





**மற்றும்**

**தரமான சிறுகதைகள்!**

**தனித்துவமான கட்டுரைகள்!!**

**வீட்டுக் குறிப்புகள்...!!!**

**விலை ரூ. 10/-**

Statement about ownership of AMBULIMAMA (Tamil)
Rule 8 (Form VI), Newspapers (Central) Rules, 1956

| | |
|---|---|
| *1. Place of Publication* | 'CHANDAMAMA BUILDINGS'<br>188, N.S.K. Salai, Vadapalani, Chennai - 600 026 |
| *2. Periodicity of Publication* | MONTHLY<br>Ist of each calendar month |
| *3. Printer's Name*<br>*Nationality*<br>*Address* | B.V.REDDI<br>INDIAN<br>Prasad Process Private Limited<br>188, N.S.K. Salai, Vadapalani, Chennai - 600 026 |
| *4. Publisher's Name*<br>*Nationality*<br>*Address* | B.VISWANATHA REDDI<br>INDIAN<br>Chandamama Publications<br>188, N.S.K. Salai, Vadapalani, Chennai - 600 026 |
| *5. Editor's Name*<br>*Nationality*<br>*Address* | B.NAGI REDDI<br>INDIAN<br>'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai, Vadapalani, Chennai - 600 026 |
| *6. Name and Address of individuals who own the paper* | CHANDAMAMA PUBLICATIONS<br>PARTNERS:<br>1. Sri B. VENKATRAMA REDDY 2. SRI B.V. NARESH REDDY<br>3. SRI B.V. SANJAY REDDY 4. Sri B.V. SHARATH REDDY<br>5. Smt. B. PADMAVATHI 6. Sri B.N. RAJESH REDDY<br>7. Smt. B. VASUNDHARA 8. Kum. B.L. ARCHANA<br>9. Kum. B.L. ARADHANA<br><br>'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Chennai - 600 026 |

I, B. Viswanatha Reddi, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

2nd March 1998

B. VISWANATHA REDDI
*Signature of the Publisher*



## WITH REGRET

A major breakdown in the printing machine disrupted the process of printing and production of the entire chain of magazines of the Chandamama group of publications. We are, therefore, obliged to **combine the February and March** issues of our periodicals. We regret the inconvenience caused to our readers, distributors, and advertisers.

**-PUBLISHER**

LECTRA

mummy you don't have to wake me up any more

Finally, a cute lil' personal LECTRA TALKING CLOCK. With an alarm system that will wake you or your child up in three different ways! Yes. You could opt for an early morning chirpy rooster sound or set it to belt out cheerful tunes. Your personal LECTRA TALKING CLOCK will also display as well as announce the time!

Available in a range of exciting colours, it's the ideal personal clock for every member in the family. So get yours today. In fact, give it to your daughter and get up late tomorrow!

Ideal corporate gift.
Bulk orders undertaken.




MRP Rs. 199 only

HTA. 7990

LECTRA

SHANKHESHWARA INDUSTRIES
Nonankuppam, Opp. Boat House,
Ariankuppam, Pondicherry - 605 007.
Fax : 0413-48748

Distributorship enquiries solicited for unrepresented areas.




# அம்புலிமாமா

நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**

## காட்டில் கடைசி வில் வீரன்

நம் சுதந்திரத்தின் பொன் விழா ஆண்டைக் கொண்டாடுகையில் நாம் பல சீரிய செயல்களை நினைவிற்குக் கொண்டு வந்து கொள்கிறோம். சந்தலர்களின் கலகம் அவற்றில் ஒன்று. இவர்கள் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியை எதிர்த்துப் போர் புரிந்தார்கள்.

ஒருமுறை ஆங்கிலப் படை இந்தப் பழங்குடி மக்கள் வாழும் ஒரு கிராமத்தை அடைந்த போது அதன்மீது அம்புகள் சரமாரியாக வந்து விழலாயின. அவை ஒரு குடிசைக்குள்ளிருந்து வருவது கண்டு அதை ஆங்கிலப் படை வீரர்கள் சூழ்ந்து கொண்டு துப்பாக்கி குண்டுகளால் துளைக்கலானார்கள். அப்போதும் அம்புகள் வந்து, படை வீரர்களைத் தாக்கின. படை வீரர்களும் தம் துப்பாக்கிச் சூட்டை விடவில்லை. நேரம் ஆக ஆக அம்புகள் வருவது குறைந்து முடிவில் ஒரு அம்பு வந்தது. அப்போது ஆங்கிலப் படைத் தலைவன் அக்குடிசைக்குள் நுழைந்து பார்த்தான். அங்கு ஒரு குடும்பத்தின் பல உறுப்பினர்கள் இறந்து விழுந்து கிடந்தனர். அவர்களுக்கு நடுவே ஒரு கிழவன் மட்டும் நின்று கொண்டிருந்தான். அவனது வலது கை குண்டுகளால் துளைக்கப்பட்டிருந்தது. அவன்தான் கடைசி அம்பை எய்தவன்.

ஆங்கிலப் படைத் தலைவன் அவனைப் பிடிக்கப் பாய்ந்தான். அப்போது அக்கிழவன் தன் இடது கையால் சட்டென வாளை எடுத்து அப்படைத் தலைவனின் தலையை வெட்டினான். இதற்குள் மற்ற படை வீரர்கள் வந்து அக்கிழவனை துப்பாக்கியால் சுட்டுக் கொன்றனர்.

இத்துடன் பழங்குடி மக்களான சந்தலர்களின் கலகம் முடிந்தது. இந்த பழங்குடி மக்களை எதிர்த்துக் கொன்றதற்கு வெட்கப்படாத ஆங்கிலப் படை வீரனே இல்லை என்று அப்போது பதிவு செய்யப்பட்ட ஆவணக் குறிப்புகள் கூறுகின்றன.

**மதிமுகம்: 102** **பிப்ரவரி/மார்ச் 1998** **புன்னகை: 2**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**



உங்கள் பிரதிகளுக்கு முந்துங்கள்

# மங்கை

பிப்ரவரி '98
மார்ச் 1998

# ஆன்மீக மலர்

(இலவச இணைப்பு)

# ஆஞ்சநேயர்

(2ம் பாகம்)

## சிறப்பு மலராக மலர்ந்துள்ளது!



- **அனுமார் தீர்த்தம்** விளங்கும் இலங்கை மாமாங்கேசுவரம்
- மதுரை சிம்மக்கல் ஜெயவீர ஆஞ்சநேயர்
- பெங்களூர் மஹாலட்சுமிபுரம் ஸ்ரீபிரசன்ன வீர ஆஞ்சநேயர்
- ஸ்ரீரங்கம் சுந்தர ஆஞ்சநேயர்
- திருச்சி கல்லுக்குழி ஆஞ்சநேயர்
- மதுரை கிருஷ்ணாயர் தெப்பத்தெரு ஆஞ்சநேயர்
- தஞ்சை பால ஆஞ்சநேயர்
- மாதவ மாருதியின் மகிமைகள்
- ஆறு பலம் தரும் அருட்பழம்... அனுமான்
- ஆஞ்சநேயர் வருகைப் பதிகம்
- **ஆதி சங்கரர்** அருள்மணிகள்
- ஆலய வழிபாடு – **காஞ்சிப் பெரியவர்**
- **திருமுருக கிருபானந்த வாரியாரின்** தீந்தமிழ் திருமொழிகள்
- கிண்டி **சாயிபாபா** கோயில் – சிறப்புக் கட்டுரை
- ஆஞ்சநேயர் பக்தி –**சாயிபாபா** அருளுரை
- **ஸ்ரீகவி** எழுதும் அரவிந்த கீதை, **எஸ். விஜயன்** எழுதும் சத்திய தரிசனம், மற்றும் **சிருங்கேரி ஜகத்குரு...** தொடர் கட்டுரைகள்
- **சுவாமி சின்மயானந்தரின்** சிந்தனைகள்
- **ஸ்ரீரமணர்** அருளமுதம்
- சோதி மரம் – **'சாயி சுதாகர்'** எழுதும் புதிய தொடர்

# நியூஜிலாண்டின் புதிய முதல் பெண் பிரதமர்

நியூஜிலண்டின் முதலாவது பெண் பிரதமராக ஜென்னிஃபர் ஷிப்ளே டிசம்பர் 8ல் பதவி ஏற்றார். உலகிலேயே முதன் முதலில் 1893ல் பெண்களுக்கு வாக்குரிமை அளித்த நாடு நியூஜிலண்ட்தான்.

ஜென்னிஃபர் 1952ல் பிறந்தவர். ஆசிரியர் பயிற்சிப் பட்டம் பெற்று 1972 முதல் 76 வரை ஆசிரியையாகப் பணிபுரிந்தார். ஒரு குடியானவரை மணந்து விவசாயத்தில் அவருக்கு உதவி புரிந்து வந்தார். ஆயினும் அவர் தீவிர அரசியலில் ஈடுபடவே விரும்பினார். நண்பர்கள் உற்சாக மூட்ட இவர் 1975ல் நேஷனல் பார்ட்டியின் உறுப்பினராகி கட்சிவேலைகளில் தீவிரமாக ஈடுபட்டார். இதனால் கட்சித் தலைவர் ஜிம் போக்லேரின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தார். அவரது திறமையையும் ஆர்வத்தையும் கண்ட போக்லேர் ஒரு வேளை அவர் தனக்குப் போட்டியாகத் தலைமைப் பதவிக்கு நிற்பாரோ என்று கூட அஞ்சலானார். அது 1997ல் உண்மையாயிற்று.



ஷிப்ளே 1987ல் நாடாளும் மன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1990ல் போக்லேர் நியூஜிலண்டின் ஃபர்ஸ்ட் பார்ட்டி யுடன்கூட்டு வைத்துக்கொண்டு நாட்டின் பிரதமரானார். ஃபர்ஸ்ட் பார்ட்டித் தலைவர் வின்ஸ்டன் பீட்டர்ஸ் துணைப் பிரதமரானார். போக்லேர் ஷிப்ளேயை சமூக நலத் துறை அமைச்சராக நியமித்தார். அவர் தம் திட்டங்களால் கடுமையாக விமரிசிக்கப்பட்டார். 1993ல் இவர் சுகாதாரத் துறையையும் 1996ல் போக்குவரத்துத் துறையையும் ஏற்று அமைச்சராக இருந்தார். பல சீர்திருத்தங்களை அத்துறைகளிலும் செய்து நிர்வாகத் திறன் பெற்ற அவர் பிரதமர் பதவி மீது கண் வைத்துக் கொண்டே இருந்தார்.

போக்லேர் அயல் நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருந்த போது நேஷனல் பார்ட்டியின் நாடாளும் மன்ற உறுப்பினர்களில் பெரும்பான்மையினரைத் தம்பக்கம் இழுத்துக் கொண்டார். போக்லேர் பதவி துறக்க வேண்டுமென நாடாளுமன்ற உறுப்பினர்கள் வலியுறுத்தினார்கள். அதனால் அவரும் தம் பதவியை விட்டு விலக வேண்டியதாயிற்று.

ஜென்னிஃபர் நியூஜிலண்ட ஃபர்ஸ்ட் பார்ட்டியுடன் உறவை வலுப்படுத்தி அதனுடன் கூட்டு சேர்ந்து தான் பிரதமரானதோடு அக் கட்சியின் தலைவரைத் துணைப் பிரதமராகவும் ஆக்கினார். முன்னாள் பிரதமர் போக்லோருக்கு அவர் அயல் நாட்டு விவகாரத் துறையை அளித்து அமைச்சராக்கினார்.

புதிய பிரதமர் ஷிப்ளே ஐந்து அம்சத்திட்டத்தை வெளியிட்டார். குடும்பம் சமுதாயம் ஆகியவற்றைப் பராமரித்தல், தற்போது 120 உறுப்பினர்கள் கொண்ட நாடாளும் மன்ற உறுப்பினர் எண்ணிக்கையைக் குறைத்துச் செலவை மட்டுப்படுத்தல். கல்வி, உடல்நலத் துறைகளில் சீர்த்திருத்தம், வரிகளைக் குறைத்தல் ஆகியவை அந்த ஐந்து அம்சத் திட்டம்.

நியூஜிலாண்டில் 1999ல் பொதுத் தேர்தல் நடக்க உள்ளது. இப்போதைய நிலையில் எதிர்க் கட்சியான லேபர் பார்ட்டி அதில் வெற்றி பெறலாம் என அரசியல் நோக்கர்கள் கருதுகிறார்கள். எதிர்க் கட்சியின் தலைவி கூட ஹெலன் கிளார்க் என்னும் பெண்மணியே. எனவே எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் அந்நாட்டின் பிரதமர் ஒரு பெண்மணி தான் என்று உறுதிபடக் கூறலாம்.



# மந்திரப் பெட்டி

நகைக் கடை நாராயணனுக்கு நான்கு புதல்வர்கள். அவர்களில் முதல் மூவரும் நல்ல புத்திசாலிகள். நான்காவது மகன் நஞ்சுண்டன் கொஞ்சம் மந்த புத்தி கொண்டவன். இதனால் நாராயணன் தன் முதல் மூன்று மகன்களையும் தன் வியாபாரத்தில் சேர்த்துக் கொண்டான். நஞ்சுண்டனுக்கு புத்தி மட்டு என்றதால் அவனை எந்த வேலையும் செய்ய விடாமல் நாராயணன் அவனை அருமை பெருமையாய் வளர்க்கலானான். நஞ்சுண்டன் தன் தாயைத் தன் இளம் வயதிலேயே இழத்து விட்டதும் இதற்குக் காரணம்.

வருடங்கள் உருண்டோடின. நாராயணன் தன் மூன்று மகன்களுக்கும் கல்யாணம் செய்து வைத்தான். ஆனால் நஞ்சுண்டனுக்கு விவாகம் செய்து வைக்க முயன்ற போது அவனுக்குப் போதிய அறிவு இல்லையெனக் கூறி எல்லோரும் தம் பெண்களை அவனுக்கு விவாகம் செய்து வைக்க மறுத்தனர். இதனால் நாராயணனுக்கு நஞ்சுண்டனைப் பற்றிய கவலையே மனதில் இருந்து வந்தது.

நஞ்சுண்டனுக்கு புத்தி மட்டு எனக் கண்டு அவனது மூன்று அண்ணிகளும் அவனிடம் வீட்டு வேலைகளை எல்லாம் செய்யச் சொல்லி வாட்டி எடுத்தனர். அவன் ஒரு தொழிலும் செய்து பணம் சம்பாதிக்காததால் அவனை வீட்டிற்கு பாரமாக அவர்கள் எண்ணினார்கள். நாராயணன் திடீரென இறந்து போகவே நஞ்சுண்டன் நிலை அந்த வீட்டில் மேலும் மோசமாயிற்று.

நஞ்சுண்டன் அந்த வீட்டில் வஞ்சகமில்லாமல் மாடு போலத்தான் உழைத்தான். ஆனாலும் அவனது அண்ணிகளுக்குத் திருப்தி ஏற்படவில்லை. அவனை வீட்டை விட்டுத் துரத்தி அவன் திரும்பியே வராது போய் விட அவர்கள் திட்டம்

—சிவனார் செல்வன்—

போட்டார்கள். ஒருநாள் நஞ்சுண்டன் வீட்டு வேலைகளைச் செய்து விட்டு மதிய உணவு சாப்பிட வந்த போது மூன்று அண்ணிகளும் படுத்து முனகிக் கொண்டிருப்பதை அவன் கண்டான்.

முதலாவது அண்ணி "எனக்கு மண்டையே வெடித்து விடுவது போலத் தலை வலிக்கிறது. இதற்கு மருந்து கோதுமை நிற நல்ல பாம்பின் விஷப் பல்லைப் பிடுங்கி எடுத்து வந்து அதை நெருப்பில் போட்டு அதன் புகையை நெற்றியில் பட வைத்தாலே என் தலைவலி போகும்" என்றாள்.

இரண்டாவது அண்ணியும் "எனக்கு ஒரே வயிற்று வலி. புலிப் பாலுடன் சுக்குப் பொடியைக் கலந்து சாப்பிட்டால்தான் இந்த வலி போகும்" என்றாள். மூன்றாவது அண்ணியும். "என் கண்கள் ஒரேயடியாக எரிச்சல் கண்டுள்ளன. இதைப் போக்க பிரம்ம ராட்சஸியின் தலைக் கொம்பை ஒடித்து எடுத்து வந்து அதை அரைத்து கண்களில் அக்குழம்பைத் தடவிக் கொண்டாலே எரிச்சல் போகும்" என்றாள்.

நஞ்சுண்டனும் "நீங்கள் கவலைப் படாதீர்கள். நான் பாம்பின் பல்லையும், புலிப் பாலையும், ராட்சஸியின் கொம்பையும் கொண்டு வந்து கொடுக்கிறேன். ஆனால் இவை மூன்றும் எங்கே கிடைக்கும்?" என்று அவர்களிடம் கேட்டான். அவர்களும் இங்கிருந்து பத்து மைல் தூரத்திலுள்ள காட்டில் கிடைக்கும்" எனவே அவனும் உடனேயே காட்டை நோக்கிச் சென்றான்.

காட்டிற்குள் சென்றதும் நஞ்சுண்



டன் ஒவ்வொரு நல்ல பாம்பையும் பிடித்துப் பார்த்தான். எந்தப் பாம்பும் கோதுமை நிறத்தில் இல்லாததால் அவற்றைத் தூக்கி எறிந்தவாறே முன்னே சென்றான். அவன் அடுத்து புலியாவது கிடைக்குமா என்று பார்த்தான். ஆனால் முயல்களும் நரிகளும் தான் தென்பட்டன. ஒரு புலியைக் கூட அவன் பார்க்கவில்லை. அவனுக்கோ ஒரே பசி. பாம்பும், புலியும் கிடைக்காததால் உரத்த குரலில் அவன் "ஏய் பிரம்ம ராட்சஸி! நீயாவது என் முன் வா. உன் தலைக் கொம்பை ஒடித்து எடுத்துக் கொள்கிறேன். பிறகு பாம்பையும் புலியையும் தேடிக் கொண்டு போகிறேன்" என்று கத்தினான்.

அதே பகுதியில் ஒரு குன்றில் மந்திரக்காரி மருதாயி என்பவள் தன்

TA-F-2



மகளுடன் ஒரு குடிசையில் வாழ்ந்து வந்தாள். நஞ்சுண்டன் கூவியது அவளது காதில் விழுந்தது. அப்போது நன்கு இருட்டி விட்டது. அவள் விளக்கை ஏற்றி எடுத்துக் கொண்டு குன்றிலிருந்து இறங்கி வந்தவாறே ''யாரடா அவன் இங்கே வந்து என்னை பிரம்ம ராட்சஸி என்று கூவி அழைத்தது? இந்த இரவு வேளையில் இப்படி என்னைக் கூப்பிட உனக்கு என்ன துணிச்சல்?'' என்று கடுங் குரலில் கேட்டாள்.

நஞ்சுண்டன் மருதாயி வருவதைக் கண்டு ''அத்தையம்மா! இந்தப் பக்கத் தில் கோதுமை நிற நல்ல பாம்பும், புலியும், பிரம்ம ராட்சஸியும் எங்கே இருப்பதைக் காணலாம்?'' என்று கேட்டான். மருதாயியும் ''ஓ! இந்த மூன்றையும் ஏன் தேடிக் கொண்டு வந்தாய்? இந்த ராத்திரி வேளையில் இவை பற்றிக் கவலைப்படாதே. அவை யாவும் என் மந்திரக் கோலில் உள்ளன. நீ இப்போது என் வீட்டிற்கு வா. அங்கே சாப்பிட்டு விட்டுப் படுத் துத் தூங்கு. நாளைக் காலையில் சாவ காசமாகப் பேசிக் கொள்ளலாம்'' என்று கூறி அவனைத் தன் குடிசைக்கு அழைத்துச் சென்றாள்.

மந்திரக்காரி மருதாயிக்கு மங் கம்மா என்ற மகள் இருந்தாள். மந்திரக் காரியின் மகள் என்ற காரணத்தால் அவளை யாரும் மணக்க விரும்ப வில்லை. அவளென்னவோ பார்க்க அழகாகத்தான் இருந்தாள். மருதாயி நஞ்சுண்டன் பேச்சிலிருந்தே அவன் ஒன்றுமறியாத அப்பாவி என்று தெரிந்து கொண்டு விட்டாள். அத னால் எப்படியாவது பேசி நஞ்சுண்ட னுக்கு தன் மகளை மணம் செய்து வைத்து விடுவது என்று அவள் தீர் மானித்து விட்டாள்.

மருதாயி ஒரு தட்டில் நான்கு சோள ரொட்டிகளையும், மசித்த கீரையும் வைத்து எடுத்து வந்து நஞ்சுண்டனை உட்கார வைத்து சாப்பிடக் கொடுத் தாள். நஞ்சுண்டனும் அதைச் சாப் பிட்டவாறே ''ஆகா! மிகவும் ருசியாக இருக்கிறதே. இந்த மாதிரி ஒருநாள் கூட என் அண்ணிகள் செய்து கொடுத் ததே இல்லையே. இதை நீங்களா செய் தீர்கள், அத்தை?'' என்று கேட்டான். மருதாயியும் ''இல்லை மருமகனே! நான் செய்யவில்லை. என் மகள் மங் கம்மாதான் இவற்றைச் செய்தாள்'' என்றாள். அப்போது ஒரு ஓரமாக நின்ற மங்கம்மாவை நஞ்சுண்டன் பார்த்தான். அவளும் அவனை பார்த்

தான்.

அப்போது மருதாயி "இவள்தான் என் மகள் மங்கம்மா. இவளை நீ கல்யாணம் செய்து கொண்டால் உனக்கு தினமும் இந்த மாதிரி ருசி யான உணவு கிடைக்கும்" என்றாள். அவனும் "ஓ! செய்து கொள்கிறேனே. ஆனால் அதற்கு முன் என் அண்ணி களுக்கு கோதுமை நிற நல்ல பாம்பின் விஷப்பல்லும், புலிப் பாலும், பிரம்ம ராட்சஸியின் தலைக் கொம்பும் கொண்டு போய்க் கொடுக்க வேண் டும். அப்போதுதான் அவர்களது தலைவலியும், வயிற்றுவலியும், கண் வலியும் போகும்" என்றான்.

அதைக் கேட்ட மருதாயி நஞ் சுண்டனைக் கொல்லவே அவனது அண்ணிகள் திட்டமிட்டுக் காட்டிற்கு அனுப்பி இருக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டாள். அதனால் அவள் "மருமகனே! கவலைப்படாதே. நாளையே நீ என் மகளை மணந்து கொள். உன் அண்ணிகள் கேட்ட பொருள்களோடு பத்தாயிரம் ரூபாய் களையும் வரதட்சணையாகக் கொடுக் கிறேன். நீ கவலைப்படாதே. எல்லா வற்றையும் என் மகள் பார்த்துக் கொள்வாள். இப்போது படுத்துத் தூங்கு" எனக் கூறி ஒரு கயிற்றுக் கட்டிலை எடுத்து வந்து குடிசைக்கு வெளியே போட்டாள். நஞ்சுண்ட னும் அதில் படுத்துக் கவலை இல்லா மல் தூங்கினான். மருதாயியும் தன் குடிசையை சுற்றி ஒரு கோடு போடவே, சுற்றிலும் நெருப்பு எரிந்து குடிசையையும் நஞ்சுண்டனையும் பாதுகாத்தது.

மறுநாள் மருதாயி தன் மகளையும்



நஞ்சுண்டனையும் தான் வழிபடும் கோவிலுக்கு அழைத்துச் சென்றாள். அங்கு காட்டு மலர்களைப் பறித்து இரு மாலைகளைக் கட்டி அவற்றை அவர்களிடம் கொடுத்து மாலை மாற்றிக் கொள்ளச் செய்து தெய்வ சன்னதியில் அவள் அவர்களது திரு மணத்தை நடத்தி வைத்தாள். பிறகு அவள் அவர்களைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றாள். அங்கு நஞ்சுண்டனிடம் ஒரு பெட்டியைக் கொடுத்து "இதில் நீ கேட்ட மூன்று பொருள்களும், நான் கொடுப்பதாகச் சொன்ன பத்தாயிரம் ரூபாய்களும் உள்ளன. உன் ஊருக்கு இவளை அழைத்துப் போக ஒரு வண்டிக்கும் ஏற்பாடு செய்திருக்கிறேன். நீங்கள் இருவரும் வண்டியில் அமர்ந்து செல் லுங்கள். உன் அண்ணிகள் தாம் கேட்ட



பொருள்கள் பற்றிக் கேட்டால் அவை இந்தப் பெட்டியில் இருப்பதாகக்கூறி அவர்களையே அதைத் திறந்து பார்த்துக் கொள்ளச் சொல்'' என்றாள். அவனும் அவ்வாறே செய்வதாகக்கூறி மங்கம்மாவுடன் வண்டியில் உட்கார்ந்தான். மருதாயியும் பெட்டியை வண்டியில் வைத்து அவர்களை வழியனுப்பி வைத்தாள். வண்டியும் நஞ்சுண்டனின் ஊருக்குப் புறப்பட்டது.

நஞ்சுண்டனை வீட்டை விட்டுத் துரத்திய பின் மறுநாள் அவனது மூன்று அண்ணிகளும் உட்கார்ந்து கொண்டு மிகவும் மகிழ்ச்சியுடன் பேசிக் கொண்டிருந்தார்கள். முதலாவது அண்ணி ''நான் சாமர்த்தியமாக நஞ்சுண்டனிடம் விஷப் பாம்பின் பல்லைக் கொண்டு வரச் சொல்லி அனுப்பி விட்டேன். அவன் முதலில் எந்த நல்ல பாம்பைப் பிடித்தாலும் அது அவனைத் தீண்டி விடும். அதன் விஷத்தால் அவன் இறந்தே போய் விடுவான். அவனைப் பற்றிய கவலை இனி நமக்கு இராது'' என்றாள்.

இரண்டாவது அண்ணியும் ''ஒரு வேளை அவன் பாம்பிடமிருந்து தப்பி விட்டாலும் நான் கேட்ட புலிப் பாலுக்காக புலியைத் தேடிக் கொண்டு அலைவான். அப்போது காட்டில் ஏதாவது ஒரு புலி அவனைக் கண்டு கொண்டு விடும். அவன் இனி உயிரோடு இருப்பது ஏது? நம்மைப் பிடித்த சனி ஒழிந்து போய் விட்டது'' என்று சிரித்துக் கொண்டே கூறினாள்.

மூன்றாவது அண்ணியும் ''அவன் பாம்பிடமிருந்தும், புலியிடமிருந்தும் தப்பி விட்டாலும் நான் கூறிய படி பிரம்ம ராட்சஸியே அவனைக் கண்டு கொன்று விழுங்கி இருப்பாள். அவன் எங்கே இனிமேல் உயிருடன் இருக்கப் போகிறான்?'' என்று சிரித்துக் கொண்டே கூறினாள்.

இப்படி அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் அவர்களது வீட்டின் முன் நஞ்சுண்டனும் மங்கம்மாவும் ஏறி வந்த வண்டி வந்து நின்றது. அதிலிருந்து ஒரு அழகிய பெண்ணுடன் பெட்டியை எடுத்துக் கொண்டு நஞ்சுண்டன் இறங்கவே அவனது மூன்று அண்ணிகளும் அந்த இருவரைக் கண்டு திகைத்துப் போனார்கள். வண்டிக்காரனும் அவர்களை விட்டு விட்டுத் திரும்பிப் போய் விட்டான்.

அப்போது முதலாவது அண்ணி ''நஞ்சுண்டா! நில் அங்கே. உள்ளே அடி எடுத்து வைத்தால் காலை

முறித்து விடுவேன். யார் இவள்? வர தட்சணை இல்லாமல் இவளை மணந்து கொண்டா வந்தாய்?'' என்று கோபத்தோடு கேட்டாள்.

நஞ்சுண்டனும் ''நீங்கள் கேட்ட பொருளும் இவளுக்குக் கொடுத்த வரதட்சணையும் இப்பெட்டியில் உள்ளன. அது மட்டுமல்ல, இரண்டாவது அண்ணி கேட்ட புலிப்பாலும் மூன்றாவது அண்ணி கேட்ட பிரம்ம ராட்சஸியின் கொம்பும் இதே பெட்டியில் உள்ளன. நீங்கள் ஒவ்வொருவராக திறந்து பாருங்கள். அப்போது நான் சொல்வது உண்மை என்று தெரியும்'' என்றான்.

முதலாவது அண்ணி அப்பெட்டியைத் திறந்து பார்க்கவே அதிலிருந்து கோதுமை நிறத்திலிருந்த நல்ல பாம்பு 'புஸ்'ஸென்று சீறியது. அதைக் கண்டு முதலாவது அண்ணி பெட்டியைச் சட்டென மூடி ''நஞ்சுண்டா! நீ சொன்னது போல் எல்லாம் இருக்கிறது. நீ உள்ளே வா'' என்று கூறினாள். அப்போது நஞ்சுண்டன் தன் இரண்டாவது அண்ணியிடம் ''நீங்கள் கேட்ட புலிப்பாலும் வரதட்சணையும் இருக்கிறதா என்று பாருங்கள்'' என்றான்.

அவளும் பெட்டியைத் திறக்கவே அதில் ஒரு புலி இருப்பதைக் கண்டு பயந்து சட்டெனப் பெட்டியை மூடி விட்டு ''நஞ்சுண்டா! நீ சொன்னது போல எல்லாம் இருக்கிறது. நீ தாராளமாக உள்ளே போகலாம்'' என்றாள். அடுத்து மூன்றாவது அண்ணியிடம் நஞ்சுண்டன் பெட்டியைத் திறந்து பார்க்கும்படிக் கூறினான். அவளும் அதைத் திறந்த போது அதில் பயங்கரமான பிரம்ம ராட்சஸி இருப்பதைக் கண்டு சட்டெனப் பெட்டியை மூடி'' நஞ்சுண்டா! நீ சொன்னது போல எல்லாம் இருக்கிறது. நீங்கள் உள்ளே போங்கள்'' என்றாள்.

நஞ்சுண்டனும் மங்கம்மாவை உள்ளே போகச் சொல்லி விட்டு அந்தப் பெட்டியை எடுத்து ஒரு அறைக்குள் வைத்தான். பிறகு அவன் தன் அண்ணிகளிடம் ''நீங்கள் உங்கள் பொருள்களைப் பெட்டியிலிருந்து எப்போது வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றான். அவர்களோ அந்தப் பெட்டியை திறக்கவே இல்லை. நஞ்சுண்டன் மங்கம்மாவுடன் அந்த வீட்டில் சுகமாக இருக்கலானான்.



# லட்சம் கொடு!

மாளவ மன்னன் மார்த்தாண்டவர்மன் கலா ரசிகன். அதனால் எத்துறையைப் சேர்ந்த கலைஞரும் மன்னனைக் கண்டு தம் படைப்பிற்குத் தக்க சன்மானம் பெற்று வந்தார். கலாதரர் என்ற சிற்பி ஒரு அழகிய சிவன் கோவிலைக் கட்ட நினைத்தார். அதற்கு நிறைய பணம் தேவைப்பட்டது. மன்னன் சிவ பக்தனாதலால் அவன் மனம் குளிரச் செய்ய அர்த்த நாரீஸ்வரர் சிலை ஒன்றை அழகாக வடித்து எடுத்துக் கொண்டு போய் மன்னனைக் கண்டார்.

மன்னனும் அச்சிலையைக் கண்டு வியந்து ''சிலை மிகவும் அற்புதம். இதற்கு லட்சம் கொடுக்கலாம்'' எனக் கூறி தன் பொக்கிஷதாரரை அழைத்து ''இவருக்கு லட்சம் கொடுங்கள்'' என்றான். மன்னன் சாதாரணமாக லட்சம் என்று கூறினால் லட்சம் செப்புக் காசுகள் எனப் பொருள். அது ஆயிரம் வெள்ளிக் காசுகளுக்குச் சமம்.

பொக்கிஷதாரர் லட்சம் செப்புக் காசுகள் கொண்ட பையைச் சிற்பியிடம் கொடுக்கவே அவரும் அதைப் பார்த்து விட்டு விஷயத்தைப் புரிந்து கொண்டு'' அரசே! தாங்கள் சொன்னதைப் பொக்கிஷதாரர் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என நினைக்கிறேன். தாங்கள் லட்சம் வெள்ளிக் காசுகள் என்று எண்ணிக் கூறியதை அவர் லட்சம் செப்புக் காசுகள் என்று நினைத்து விட்டார்'' என்று சாதுரியமாகக் கூறினார்.

மன்னனும் சிற்பியின் வாக்குச்சாதுரியம் கண்டு மகிழ்ந்து லட்சம் வெள்ளிக்காசுகளைக் கொடுக்கும்படி உத்திரவிட்டார்.





# மாமன்னர் அசோகர்

13

(தந்தை பிந்துசாரன் இறந்த செய்தி கேட்டு அசோகன் உஜ்ஜயினியிலிருந்து கொஞ்சப் படைகளோடு கிளம்பி பாடலிபுத்திரத்திற்கு வந்தான். அப்போது தன்னைக் கொல்ல வந்த அரச குமாரர்களைக் கொன்று விட்டு அவன் தன் தந்தையின் உடலுக்கு ஈமக்கிரியைகளைச் செய்தான். மூதறிஞர்கள் கேட்டுக் கொண்டதன் பேரில் அவன் ஆட்சிப் பொறுப்பை ஏற்றான். தட்சசிலத்திலிருந்து கோபத்தோடு கிளம்பி வந்த சுசிம்மன் தன் அகங்காரத்தால் பாடலிபுத்திரத்தின் தலைவாசலில் கொல்லப்பட்டான். பெரியோர்களின் வேண்டுதலின் பேரிலும் விதிஷா தேவி அனுமதித்ததாலும் அசோகன் ஒரு அரச குமாரியை மணந்து கொண்டு மகத மன்னனானான். பின் படைத்தலைவர்களின் கோரிக்கைப்படி கலிங்கத்தின் மீது படை எடுக்க அசோகன் ஏற்பாடுகளைச் செய்யலானான். அதன் பிறகு–)

பாடலிபுத்திரத்திலிருந்து உஜ்ஜயினி வந்து சேர்ந்த தூதன் அரண்மனையில் விதிஷாதேவியைக் கண்டு ''மகாராணியை வணங்குகிறேன்'' எனக் கூறி கை கூப்பினான். விதிஷா தேவி ''என்னை இவ்வாறு அழைப்பதை நான் விரும்பவில்லை. மேலும் மன்னன் மணந்து கொண்ட அசந்திமித்திரைதான் மகாராணி'' என தூதனிடம் கூறினாள்.

தூதனோ ''மன்னர் மற்றொரு திருமணம் செய்து கொண்டு விட்டதால் நீங்கள் மகாராணி அல்ல என்றாகி விடுமா? உங்களையும் உங்கள் குழந்தைகளையும் எப்போதும் மன்னர் நினைத்துக் கொண்டே இருக்கிறார். தாங்கள் ஒரு தடவை மட்டுமல்ல, இருமுறைகளில் அவரது உயிர் போகாமல் காப்பாற்றியதை அவர் மறக்கவில்லை. தங்களையும் குழந்தைகளையும் எண்ணி எண்ணி அவரது மனம் துடித்துக் கொண்டிருக்

கிறது. மன்னர் விரைவில் கலிங்கத்தின் மீது படை எடுத்துப் போகப் போகிறார். எனவே அவர்போருக்குக் கிளம்பு முன் தங்களையும் குழந்தைகளையும் பாடலிபுரத்தில் நிலையாக வசிக்க ஏற்பாடுகளைச் செய்ய விரும்புகிறார்'' என்று கூறி அசோகனின் கடிதத்தை அவனிடம் கொடுத்தான்.

சற்று நேரத்திற்குப் பின் அவள் தூதனைப் பார்த்து ''ஒரு காலத்தில் ஒரே கொந்தளிப்பாக இருந்த இந் நகரம் என் கணவரின் முயற்சியால் இப்போது அமைதிப் பூங்காவாக விளங்குகிறது. சட்ட திட்டங்களை அவர் நல்ல விதமாக அமல்படுத்தினார். இதற்காக நேர்மையான அதிகாரிகளை நியமித்தார். திறமைமிக்க அந்த அதிகாரிகள் எங்கும் அமைதியை நிலை நாட்டியதால் இங்குள்ள மக்களும், நானும் என் குழந்தைகளும் நிம்மதியாக வாழ்ந்து வருகிறோம். இப்படிப்பட்ட அமைதியான சூழ்நிலையில் மகேந்திரனும் சங்கமித்திரையும், உயர்தரமான குருமார்களின் நேரடிப் பார்வையில் கல்வி பயின்று வருகிறார்கள். இவ்வளவு அமைதியான சூழ்நிலையில் வளர்ந்து வரும் அவர்களைக் கூச்சலும் வன்முறைகளும் உள்ள பாடலிபுத்திரத்திற்கு கொண்டு போவதா? இங்கு மரியாதைக்குரிய குரு தேவர் உபகுப்தர் அவ்வப்போது விஜயம் செய்கிறார். அவரை தரிசித்து அவரது அறிவுரைகளைக் கேட்பதில் என் குழந்தைகள் மிகவும் ஆர்வம் கொள்கிறார்கள். இம்மாதிரியான அரிய வாய்ப்புகள் அவர்களுக்குப் பாடலிபுத்திரத்தில் கிடைக்காது. அங்கு பதவியில் ஒட்டிக்



கொண்டு அதிகாரம் புரிபவர்களைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள்?'' என்று தன் கவலையை வெளிப்படுத்தியவாறே கேட்டாள்.

தூதன் ஒரு அசட்டுச் சிரிப்பு சிரித்தானேயொழிய வேறெதுவும் கூறவில்லை. அப்போது விதிஷா தேவி ''மன்னர் என்றால் நாங்கள் மிகவும் பெருமைப்பட்டு மரியாதை செய்பவர்களே. ஆனால் அவர் படை எடுத்துப்போவதுதான் எங்களுக்குச்சற்றும் பிடிக்கவில்லை. ஒன்றுமறியாத அப்பாவி மக்களைக் கொன்று தள்ளுவதும் நன்கு அமைந்த நகரங்களைத் தாக்கி எரித்து நாசப்படுத்துவதும் தானே இந்தப் போரின் விளைவாக இருக்கும்! இவையாவும் யார் பேரில் நடக்கும்? அசோக மன்னரின் பெயரில்தானே. அதனால் மன்னர்



படை எடுத்துப் போகும் எண்ணத்தைக் கை விட்டாலே நான் என் குழந்தைகளுடன் பாடலிபுத்திரத்திற்கு வருவேன் என்று உன் மன்னரின் நான் சொன்னதாகக் கூறு'' என்றார் அத்தூனிடம்.

தூதனும் ''மகாராணியாரே! தாங்கள் கூறியதை மன்னரிடம் தெரிவிக்கிறேன். ஆனால் தங்களுக்கு பதிலனுப்ப அவருக்கு நேரம் இருக்குமோ அல்லது இராதோ என்று எனக்குத் தெரியாது. ஏனெனில் படையெடுப்பிற்கான ஏற்பாடுகள் மும்முரமாக நடந்து கொண்டிருக்கின்றன. மன்னர் போருக்குப் போகு முன் தங்களைப் பார்க்க விரும்புகிறார் போலும்'' என்றான்.

விதிஷாவும் ''அது நடக்குமென்று நான் நினைக்கவில்லை. ஆனால் இங்கிருந்தபடியே நான் உங்களது மன்னரின் நலனுக்காக வேண்டிக் கொள்கிறேன். சரி நீ இவ்வளவு தூரம் சிரமப்பட்டு மன்னரின் செய்தியை எனக்குக் கொண்டு வந்திருக்கிறாய், அதற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்று கூறினாள். தூதனும் அவளை வணங்கி விட்டு அங்கிருந்து சென்றான்.

அசோகன் பாடலிபுத்திரத்தில் அரண்மனையின் மேல் தளத்தில் மேற்கு திசையில் மறையும் சூரியனைப் பார்த்தவாறே நடை போட்டுக் கொண்டிருந்தான். சற்று நேரத்திற்கெல்லாம் யசன் அங்கு வந்து அவனை வணங்கி நின்றான். ஆனால் அசோகன் எதுவும் பேசவில்லை. அப்போது யசன் அவன் பேசாமலிருக்கும் காரணத்தைக் கேட்டான். அசோகன் ஒரு பெருமூச்சுவிட்டவாறே ''இன்று ஒன்றன் பின் ஒன்றாக கெட்ட செய்திகளே கிடைத்தன'' என்று வருத்தத்துடன் கூறினான்.

யசனும் ''அப்படி என்ன செய்திகள்?'' என்று கேட்க அசோகனும் ''முதலாவது கலிங்கத்திலிருந்து நம் ஒற்றர்கள் கொண்டு வந்த செய்தி கலிங்க மன்னன் வாரிசு இல்லாமல் இறந்து போனது உண்மைதான். ஆனால் கலிங்கத்தின் இருபத்தொன்று பகுதிகளின் அதிபர்களும் ஒரு அரசின் கீழ் ஆட்சி புரிவது போல் மிகத் திறமையுடன் நாட்டை ஆண்டு வருகிறார்கள். அவர்களது ஒற்றுமையை யாராலும் பிளக்க முடியவில்லை. நல்ல பயிற்சி பெற்ற அவர்களது படைகள் மிகவும் பலம் பொருந்தியவை. அவர்களது வியாபாரமும்

நாளுக்கு நாள் பெருகி முன்னேறி வரு கிறது'' என்றான் சற்று கோபத்தோடு.

யசனும் ''சரி, அடுத்த கெட்ட செய்தி என்ன?,' என்று கேட்கவே, அசோகனும் ''உன் அருமைத் தங்கை அங்கு சுகமாக இருப்பதாக சாக்கு கூறி பாடலிபுத்திரத்திற்கு வர மறுத்து விட் டாள்'' என்றான். அது கேட்டு யசன் ''அவள் கூறியது ஒரு சாக்காக இராமல் உண்மையாக இருக்கலாம். அவளு டைய குழந்தைகள் இருவரும் அங்கு மகிழ்ச்சியுடன்தான் இருக்கிறார்கள்'' என்றான். பிறகு அவன் சற்று யோசித்து விட்டு ''அரசே! இப்போது நான் இன்னொரு கெட்ட செய்தியைக் கூறப் போகிறேன்'' எனவே அசோக னும் சற்று எரிச்சலோடு ''அது என்ன? சொல் சீக்கிரம்'' என்று கேட்டான்.

யசனும் ''நம் கப்பல்கள் சாமான் களை ஏற்றிக் கொண்டு வியாபாரம் செய்ய கீழ் திசை நாடுகளுக்குச் சென்றது தங்களுக்குத் தெரிந்ததே. ஆனால் ஜாவா, சுமத்திரா, பாலி முதலிய தீவுகளில் நம் வர்த்தகர்கள் எந்தப் பொருளையும், விற்க முடி யாது போயினர். அங்குள்ள மக்கள் கலிங்கத்து வியாபாரிகளைத் தவிர வேறு எந்நாட்டு வியாபாரியிடமிருந் தும் பொருள்களை வாங்க முடியாது என்று கட்டுப்பாடாகக் கூறி விட்டார் கள். கலிங்க வியாபாரிகள் அந்நாட்டு மக்களை அவ்வளவுக்குக் கவர்ந்து விட்டார்கள்'' என்றான்.

அசோகனும் ''அந்தக் கவர்ச்சியை நாம் மறையச் செய்து விடலாம். கலிங் கத்தை நாம் வென்றபின் நம் அனுமதி பெறாமல் அங்கு யாரும் வியாபாரம் செய்யக் கூடாது என்று உத்தரவு பிறப்




பித்து விடலாம். இப்போது கலிங்கத் தின் மீது படை எடுத்துச் செல்ல வேண் டும் என்பதற்கு இதுவும் ஒரு காரண மாகி விட்டது. எனவே படை எடுப்பை நிறுத்துவது என்ற பேச் சிற்கே இடம் இல்லை'' என்றான் ஆவேசத்தோடு.

அசோகன் தன் மனதிலுள்ள துய ரத்தை வெளிக்காட்ட விரும்பாமல் அவ்வாறு ஆவேசம் கொண்டு பேசி னான் என்று யசனுக்குப் புரிந்து விட்டது. அதனால் அவன் எதுவுமே பேசவில்லை.

தயா நதிக் கரையில் அமைந்த அழ கிய நகரம் தோசாலி. நகரில் மனம் கவரும் பூங்காக்கள் பலவும் நகரைச் சுற்றி மலைகளும் இருந்து அதை அழகு பெறச் செய்தன. தயா நதிதான் புராணங்களில் கூறப்பட்ட சரஸ்வதி



நதி என்று அப்பகுதி மக்கள் கருதி வந்தனர். சரஸ்வதி நதிக் கரையில் ததீசி என்ற முனிவர் இருந்து வந்தார். அக்காலத்தில் விருத்தாசுரன் என்ற ராட்சஸன் மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் மிகுந்த தொல்லை கொடுத்து அவர்களைத் தாக்கிக் கொன்று வந்தான்.

அவனை எதிர்க்க இந்திரனால் முடியவில்லை. ததீசி முனிவரின் முதுகெலும்பால் அந்த ராட்சஸனைத் தாக்கிக் கொல்ல முடியும் என்பதை இந்திரன் அறிந்து கொண்டான். அவன் ததீசி முனிவரிடம் போய் அது பற்றிப் பேசவே, பரோப காரமே உயர்ந்தது என்ற நெறியை கடைப் பிடித்து வந்த அந்த முனிவர் உலகில் மக்கள் துயரைப் போக்கும் நல்லெண்ணத்தில் இந்திரனின் வேண்டு கோளை ஏற்று தியானத்தில் அமர்ந்து தன் உயிரை விட்டார். இந்திரன் அவரது முதுகெலும்பைத் தன் வஜ்ஜிராயுதமாக எடுத்துக் கொண்டான். தவ வலிமை கொண்ட முனிவரின் முதுகெலும்பால் இந்திரன் விருத்தாசுரனைத் தாக்கி அவனைக் கொன்றான். மனிதர்களும் தேவர்களும் அதுவரை அந்த ராட்சஸனால் தமக்கு செய்யப் பட்ட தொல்லைகளிலிருந்து விடுபட்டார்கள்.

ததீசி முனிவரின் இந்த உயரிய தியாகம் தோசாலி மக்களை அவரை என்றென்றும் மறக்க முடியாததாகச் செய்து விட்டது. அவரது பரோபகாரச் சிந்தையை நினைவில் கொண்டு அவர்கள் ஜாதி, மத பேதம் பாராமல் யாவருக்கும் எப்போதும் உதவி புரிந்து வந்தார்கள். அந்நகரில் ஜைன மதத்தவரும் இருந்தனர். பௌத்தர்களும் இருந்தனர். அவர்களை அந்நகர வாசிகள் பாரபட்சம் காட்டாமல் சமமாகவே கருதி வந்தார்கள். ஜைன முனிவரான ரிஷபநாத தீர்த்தங்கர் அந்நகரைச் சேர்ந்தவரே.

தோசாலி மக்கள் தம் நகருக்கு நடுவே மிகப் பெரியதான அவரது உருவச் சிலை ஒன்றை வைத்து மரியாதை காட்டினார்கள். மூன்று மதத்தினர்களும் அச்சிலைக்கு அவ்வப் போது மாலை அணிவித்து மரியாதை செலுத்தி வந்தார்கள். மௌரிய வம்சத்திற்கு முன் மகதத்தை ஆண்ட மன்னன் ஒருவன் தோசாலி மீது படை எடுத்து வந்து அந்தத் தீர்த்தங்கரின் சிலையைத் தூக்கிக் கொண்டு பாடலிபுத்திரத்திற்குச் சென்றான். அந்தச் சிலையை மீட்க இரண்டு மூன்று முறைகளில்

கலிங்க மன்னர்கள் பாடலிபுத்திரத்தின் மீது படை எடுக்க நினைத்தார்கள். ஆனால் ஜைனர்கள் அம்மன்னர்களைத் தடுத்து ''நாம் பொறுமையைக் கொண்டு பிறரை மன்னிக்கும் இயல்பை உயடைவர்களாக இருக்க வேண்டும். கலிங்கத்தில் மரியாதை செய்யப்பட்ட சிலை பாடலிபுத்திரத்தில்தற்போது கெளரவிக்கப்படுவதில் எவ்விதத் தவறும் இல்லை. இதை நாம் சகித்துக் கொள்ள வேண்டும். மனிதனுக்கு சகிப்புத்தன்மை மிகவும் அவசியம். எனவே பாடலிபுத்திரவர்களுடன் சண்டை போடாமல் நாமே அது போல இன்னொரு சிலையைத் தயாரித்து நம் நகரில் நிறுவி விடலாம்'' என்றார்கள்.

அது கேட்டு கலிங்க மன்னனும் ''சரி. நீங்கள்கூறுவது போலவே புதிய சிலை ஒன்றை உருவாக்கி நம் நகரில் வைத்து விடுவோம்'' எனக்கூறி ரிஷப நாத தீர்த்தங்கரின் சிலையைத் தயாரிக்க ஏற்பாடு செய்தான். ஆனால் சிலை தயாராவதற்கு முன்பே அவன் இறந்து விட்டான். அவன்தான் கலிங்கத்தின் கடைசி மன்னன்.

கலிங்க மன்னன் இறந்து விட்ட போதிலும் நாட்டில் அமைதியே நிலவியது. வியாபாரமும் நன்கு நடந்தது. நாடு வளம் பெற்று நல்ல நிலையில் இருந்தது. இருபத்து நான்கு பகுதிகளின் அதிகாரிகளும் ஆட்சியைத் திறன்பட ஆள்வதிலேயே தம் முழு கவனத்தையும் செலுத்தி ஒற்றுமையுடன் கலிங்கத்தைக் காத்து வந்தார்கள்.

இந்த நிலையில்தான் ஒருநாள் திடீரென்று கலிங்கத்து எல்லையில் மகதப் படைகள் வந்து குவிந்தன. இந்தச் செய்தி ஒற்றர்கள் வாயிலாக கலிங்கத்தை ஆண்டு கொண்டிருக்கும் இருபத்தோரு அதிபர்களுக்கும் தெரிய வந்தது. அது கேட்டு அவர்கள் மிகவும் வியப்பை அடைந்தார்கள். ஒரு வேளை மகதப் படைகள் வேறு எங்கா



வது போகும் போது வழியில் தம் எல்லைப் புறத்தில் தங்கி இருக்கின்றனவோ என்று சந்தேகப்பட்டனர். இவ்வாறு அவர்கள் யோசித்துக் கொண்டிருக்கையில் மகதப் படைகள் கடல் சீறுவது போல கலிங்கத்துள் நுழைந்தன.

கலிங்க மக்களை அப்படை வீரர்கள்கண்ட இடங்களிலெல்லாம் வெட்டிப் போட்டார்கள். அப்பாவி மக்களைக் கொன்றதோடு வீடுகளுக்குத் தீ வைத்து எரித்தார்கள். இப்படியே பல ஊர்களை எரித்தவாறே அப்படைகள் தோசாலி நகரை வந்தடைந்தன.

அப்போது கலிங்கத்து முதிய தலைவர் ஒருவர் ''இந்த அநியாய ஆக்கிரமிப்பை எதிர்த்து எதிரிகளை விரட்ட வேண்டும். மகதப் படைகளை விரட்டி அடிக்க வேண்டும்'' என்று வீரகர்ஜனை செய்தார். அதை நாட்டை ஆளும் எல்லோரும் ஆமோதித்தார்கள். எல்லோரும் தம் பகுதிகளில் மகதப் படைகளை எதிர்ப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யலானார்கள். வீட்டுக்கு ஒரு இளைஞன் வீதம் படையில் சேர்ந்து யாவரும் தோசாலி நகரத்திற்கு மறுநாளே போய்ச் சேர வேண்டுமென அறிவிக்கப்பட்டது.

அந்த அறிவிப்பைக் கேட்ட மக்கள் முதலில் ஆச்சரியப்பட்டார்கள். அதன் பின் தம் வீடுகளிலிருந்த ஆயுதங்களை எடுத்துக் கொண்டு தோசாலி நகரைப் போய் அடைந்தார்கள். தோசாலி நகரம் எதிரிகள் வசமாகி விட்டால் கலிங்கமே எதிரிகளுடையதாக ஆகி விடும் என அவர்கள் நினைத்தது சரியே. எனவே அவர்கள் அந்நகரை எப்படியாவது காப்பாற்றி எதிரிகளை விரட்டி விடுவது என்று கங்கணம் கட்டிக் கொண்டார்கள்.

வயது வித்தியாசமில்லாமல் சிறுவர் இளைஞர்கள், முதியவர்கள் என்று யாவருமே தமது ஊர்களிலிருந்து தோசாலிக்குப் புறப்பட்டு விட்டார்கள்.

அமைதி நிலவிய கிராமங்களிலிருந்து. ஆண்களெல்லாம் புறப்பட்டுப் போய் விட்டதால் பெண்கள் எப்போது என்ன நேருமோ என்று திகிலுடன் இருந்தார்கள். தோசாலியை அடைந்த இளைஞர்களுக்கு கலிங்கப் படைத் தலைவர்கள், தக்க ராணுவப் பயிற்சியை அளித்தார்கள்.

**(தொடரும்)**





# இசை யாருக்கு?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் ஏன் இப்படி சிரமப்படுகிறாய்? யாருடைய மனதையோ சரியாகப் புரிந்து கொள்ளாமல் நீ இம் முயற்சியில் இறங்கி விட்டாயா? சிலர்தம் நிலையை உயர்வாக எண்ணுவது உண்டு. அது அகங்காரத்தின் காரணமாகவா அல்லது மனித இயல்பா என்று கூறி விட முடியாது. இதற்கு உதாரணமாக முரளிதரன் என்பவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறி கதையை ஆரம்பித்தது.

முரளிதரன் ஒரு நல்ல சங்கீத வித்வான். அவன் இசைக்கேதன் வாழ்நாள்

## வேதாளம் சொல்லும் கதை



முழுவதையும் அர்ப்பணித்து வந்தான். அவன் கடவுள் பக்தி மேலீட்டாலும் இயற்கை அழகால் கவரப்பட்டதாலும் பாடல்களை அனுபவித்துப் பாடி வந்தான். இதனால் அவன் பல பாடல்களை இயற்றினான். அப்பாடல்களை மற்றவர்களும் பாடி வந்தார்கள்.

முரளிதரனைப் பற்றிக் கேள்விப் பட்ட அந்நாட்டு மன்னன் அவனைத் தன் ஆஸ்தான வித்வானாக இருக்கும்படி வேண்டினான். முரளிதரன் அதற்கு இணங்காமல் ''அரசே! என் மனமகிழ்ச்சிக்காக நான் உலாவும் போது எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பாடிக்கொண்டே இருப்பேன். அப்போது என் இசையால் கவரப்பட்டு பறவைகளும் மிருகங்களும் என்னை சுற்றி நின்று கொள்ளும். மனிதர்களும் என்னைச் சூழ்ந்து நின்று என் இசையை ரசிப்பார்கள். இதை நான் தடுப்பதும் இல்லை. ஆட்சேபிப்பதும் இல்லை. ஆனால் மனிதர்களுக்கிடையே மனிதர்களுக்காக மட்டும் பாடச்சொன்னால் அந்த இடத்தில் ஒருநாளில் ஒரு வேளைக்கு மேல் தங்க மாட்டேன். அங்கு ஒரு மணி நேரத்திற்கு மேல் பாடவும் மாட்டேன். எனவே நான் என்னை தர்பாருக்குள்ளேயே இருக்கச் செய்து கொள்ள விரும்பவில்லை'' என்றான்.

அப்போது மன்னன் ''சரி, அப்படியானால் என் தர்பாருக்கு வந்து ஒரு மணி நேரம் பாடி அங்குள்ளவர்களை மகிழ்வியுங்கள். அது போதும்'' என்றான். முரளிதரன் அதற்கு இணங்கினான்.

மன்னன் தன் அமைச்சரிடம் ''முரளிதரன் என்ற மாபெரும் சங்கீத வித்வான் நம் தர்பாருக்கு வந்து பாட சம்மதித்திருக்கிறார். அவர் ஒரு மணி நேரம் பாடப் போவதாகக் கூறி இருக்கிறார். நீங்கள் அவர் இசைக் கச்சேரிக்குச் செய்யும் ஏற்பாடுகளால் அவர் மகிழ்ந்து போய் நம் தர்பாரிலேயே நிரந்தரமாகத் தங்கி விட வேண்டும். எனவே அதற்குத் தக்கபடி எல்லா ஏற்பாடுகளையும் செய்யுங்கள்'' என்று கூறினான்.

அமைச்சரும் முரளிதரன் இசைக் கச்சேரிக்காக பிரமாதமான ஏற்பாடுகளைச் செய்யலானார். முரளிதரன் அமர்ந்து பாட ரத்தின கம்பளம் விரித்து வைத்தார். பாடகர் அவ்வப்போது சாய்ந்து கொள்ள திண்டுகளை வைத்தார். அவருக்கு விசிறி வீச இருவரை நியமித்தார். அக்கச்சேரியைக்

கேட்க நகரிலுள்ள பிரமுகர்களெல்லோரும் அழைக்கப்பட்டனர். பாடகர் ஒரு பாட்டைப் பாடி முடிந்ததும் உடனே கைதட்டப் பலரையும் அவர் நியமித்தார்.

குறிப்பிட்ட நாளில் கச்சேரி செய்ய முரளிதரன் தர்பாருக்கு வந்தான். மன்னனே அவனை வரவேற்று மாலை அணிவித்து தான் செய்துள்ள ஏற்பாடுகளையெல்லாம் விவரித்து ''இவற்றில் ஏதேனும் குறை இருந்தால் தெரிவியுங்கள். இப்போதே சரி செய்து விடுகிறேன்'' என்றான். முரளிதரனும் சிரித்தவாறே ''சங்கீத வித்வான் விரும்பும் ஒரே ஏற்பாடு அவன் முன் இசையை ரசித்துக் கேட்கும் அன்பர்கள் கூட்டமே'' என்றான். பிறகு மேடையில் ஏறி அவன் அமர்ந்து கச்சேரியை ஆரம்பிக்கு முன் சபையோரிடம் ''மதிப்பிற்குரியவர்களே! என் பாட்டுகள் வழக்கமாய் எல்லா வித்வான்களும் பாடும் விதத்தில் இருக்காது. என் மனோ தர்மப்படிதான் அவை இருக்கும். நான் ஏதாவது தவறு செய்தால் நானேதான் திருத்திக் கொள்ள வேண்டும். உங்களுக்கு என் பாணி வழிமுறைகள் புரியாதும் போய் விடலாம். எனவே என் இசைக்கு இடையூறு செய்யாமல் மௌனமாயும் அமைதியாயும் இருந்து என்னைப் பாட அனுமதிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். நான் பாடப் போவது ஒரு மணி நேரம் மட்டுமே. அதற்கு மேல் இல்லையெனவும் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்று கூறிக் கச்சேரியை ஆரம்பித்தான்.

அவன் ஒரு மணி நேரமானதும் பாடுவதை நிறுத்தி ''சொன்னபடி ஒரு



மணி நேரம் பாடி விட்டேன். எனக்கு விடை கொடுங்கள்'' என்று கூறி எழுந்து நின்றான். அப்போது அவர்கள் அவனது இசை அற்புதமெனக் கூறி மேலும் ஒரு மணி நேரம் பாடும்படி வேண்டினார்கள். ஆனால் முரளிதரன் அதற்கு இணங்காமல் மன்னன் கொடுத்த சன்மானத்தைப் பெற்றுக் கொண்டு கிளம்பிப் போய் விட்டான்.

மன்னனோ தான் செய்த ஏற்பாடுகளால் முரளிதரனின் மனதைக் கவர முடியவில்லையே என வருந்தி அமைச்சரிடம் ''இந்த முரளிதரன் உயர்தர சங்கீத வித்வான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் கர்வம் கொண்டவனா அல்லது இல்லையா என்பதுதான் சரியாகத் தெரியவில்லை. இவன் எங்காவது ஒரு மணி நேரத்திற்கு மேல் பாடினால் அதை



எனக்குத் தெரிவிக்கும் படி நம் ஒற்றர் களிடம் கூறுங்கள்'' என்றான். அப் போது முதல் முரளிதரனை ஒற்றர்கள் கண்காணிக்கலானார்கள்.

தர்பாரில் முரளிதரன் கௌரவிக்கப் பட்ட விஷயம் நாடெங்கிலும் பரவி யது. பிரபுக்களும் பணக்காரர்களும் முரளிதரனை தம் இல்லங்களில் கச் சேரி செய்ய அழைத்தனர். அவனும் எல்லோருடைய அழைப்புகளையும் ஏற்றாலும் எங்கும் ஒரு மணி நேரத் திற்கு மேல் பாடவில்லை. ஆனால் அவனை ஒரு மணி நேரத்திற்கு மேல் எப்படியாவது பாட வைப்பது என எண்ணி ஒரு பிரபு முரளிதரனை யாரா வது ஒருவர் தம் வீட்டில் ஒரு மணி நேரத்திற்கு மேலாகப் பாட வைத்தால் அவருக்கு இரண்டு லட்சம் வராகன் கள் பரிசளிப்பதாக அறிவித்தார்.

இதனால் முரளிதரனைக் கச்சேரி செய்ய அழைப்போரின் எண்ணிக்கை மிகவும் அதிகரித்து விட்டது. ஏழை, பணக்காரர் என்று பலர் அவனைத் தம் இல்லங்களுக்கு அழைத்தனர். முரளி தரனும் எல்லோருடைய அழைப்பு களை ஏற்று ஒரு மணி நேரமே கச்சேரி செய்தான். சில ஏழைகள் அவனை ஒரு மணி நேரத்திற்கு மேல் பாட வைத்து பிரபு அறிவித்த இரண்டு லட்சம் வரா கன்களை அடைய விரும்பினார்கள். இதை அறிந்தும் அவர்கள் மீது இரக் கப்பட்டு முரளிதரன் ஒரு மணி நேரத் திற்கு மேல் அவர்களது வீடுகளிலும் பாடவில்லை.

புழுப்பூரில் பரமன் என்ற ஏழை இருந்தான். அவனுக்கு இசை என்றால் உயிர். அவன் பல தடவைகள் முரளி தரனைத் தொடர்ந்து போய் பல இல்லங்களிலும், தனியாகப் பாடிக் கொண்டிருக்கும் போதும் கேட்டு ரசித்து வந்தான். அவனது இசை பற்றி பரமன் எல்லோரிடமும் புகழ்ந்து கூறி யும் வரலானான். பலர் முரளிதரனைக் கர்வம் பிடித்தவன் என்று கூறுவதை அவனால் சகிக்க முடியவில்லை.

அதனால் ஒருநாள் அவன் முரளி தரனைக் கண்டு ''ஐயா! உங்களைக் காண்பதையே நான் பெரும் பாக்கிய மாகக் கருதுகிறேன். உங்களைப் பலர் மண்டைக் கர்வம் பிடித்தவர் என்று கூறுவதை என்னால் சகித்துக் கொள்ள முடியவில்லை. என் வீட் டிற்கு வந்து நீங்கள் பாடி இந்த அபவாதத்தைப் போக்கிக் கொள்ள வேண்டும்'' எனப் பணிவுடன் வேண் டினான்.

முரளிதரன் அவனைப் பரிவுடன் பார்த்து ''மக்களின் ஏழைமையைப்

போக்குவது அரசின் கடமை. இதை வேறு சிலர் பொறுப்பேற்க முன் வருகிறார்கள். அதைச்சமூக சேவை என்று அவர்கள் கருதுகிறார்கள். யாராவது என்னைக் கர்வம் பிடித்தவன் என்று கூறினால் என்னால் என்ன செய்ய முடியும்? என்னால் முடியாது என்பதைச் செய்ய நான் முயல மாட்டேன். உன் வீட்டிலும் நான் ஒரு மணி நேரத்திற்கு மேல் பாட மாட்டேன். இதற்கு உனக்குச் சம்மதம் என்றால் நான் உன் வீட்டிற்கு வந்து பாடுகிறேன்'' என்றான்.

பரமனும் ''நீங்கள் உங்களால் முடிவதைச் செய்வதாகக் கூறினீர்கள். அது போதும்'' எனக் கூறி அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். அவன் வேறு யாரையும் முரளிதரனின் இசையைக் கேட்கத் தன் வீட்டிற்கு அழைக்கவில்லை. வேறு எந்த ஏற்பாட்டையும் அவன் செய்யவில்லை. முரளிதரனை அவன் ஒரு பலகையில் உட்கார வைத்து அவன் எதிரிலேயே உட்கார்ந்து கொண்டான்.

முரளிதரன் பாட ஆரம்பித்தான். பரமன் மெய் மறந்து அதைக் கேட்டுக் கொண்டிருந்தான். ஒரு மணி நேரமானதும் அவன் டக்கென்று பாட்டை நிறுத்தி விட்டான். அப்போது பரமன் ''என்ன இது? பாட்டை முழுவதுமாய்ப் பாடி முடிக்காமல் பாதியில் நிறுத்தி விட்டீர்களே. இது முறையா?'' என்று பணிவுடன் கேட்டான். அது கேட்டு முரளிதரன் புன்னகை புரிந்து பாதியில் நிறுத்திய பாட்டைப் பாடி முடித்ததோடு மேலும் இரண்டு மனி நேரம் பாடி பரமனையும் அவனது குடும்பத்தவரையும் மகிழச் செய்தான்.



ஒற்றர்கள் வாயிலாக இதை மன்னன் அறிந்து பரமனுக்கு அந்தப் பிரபுவிடமிருந்து இரண்டு லட்சம் வராகன்கள் வாங்கிக் கொடுத்ததோடு தானும் நிறையப் பரிசுகளை அளித்தான்.

வேதாளம் இக்கதையைக் கூறி விக்கரமனிடம் ''மன்னனே! முரளிதரன் மன்னன் எவ்வளவு வேண்டியும் ஒரு மணி நேரத்திற்கு மேல் பாட முடியாது என்று கூறி விட்டான். இது அவனது கர்வத்தைத்தானே காட்டுகிறது. ஆனால் ஏழையான பரமன் வீட்டில் மட்டும் மூன்று மணி நேரம் பாடினானே. பரமனுக்கு பிரபுவிடமிருந்து இரண்டு லட்சம் வராகன்கள் கிடைக்கச் செய்து அவனது ஏழைமையைப் போக்க வேண்டும் என்றா முரளிதரன் நினைத்தான்? இது உண்மை என்றால் மன்னனிடம் கர்வத்தோடு பதில் கூறி

ஏழைப் பரமனுக்குப் பரிவு காட்டியது அவனது இயல்பில் முரண்பாடு தானே! இச்சந்தேகத்தைப் போக்க சரியான பதில் தெரிந்து வைத்திருந் தும் நீ பதில் கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

அதைக் கேட்ட விக்கிரமன் ''முரளி தரனின் போக்கில் எவ்வித முரண் பாடும் இல்லை. அவனுக்கு இசை யில்தான் மிகுந்த பிடிப்பு. இதை அவ னது கர்வம் எனக் கூற முடியாது. மன்னனின் தர்பாரில் பாடச் சென்ற போது மன்னனிடம் தனக்கு வேண்டி யது இசையை ரசிக்கும் அன்பர்களே என்று கூறினான். அவன் பாடிய இடங் களிலெல்லாம் தான் எதிர்பார்த்த ரசிகர்களை அவன் காணவில்லை. ஆனால் பரமன் வீட்டிற்குப் போய் அவன் பாடும் போது சரியாக ஒரு மணிநேரம் பாடி விட்டுப் பாடிய பாட் டைப் பாதியில் நிறுத்தினான். ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்த பாட்டை முரளிதரன் பாதியில் நிறுத்தியது முறையல்ல என்று பரமன் கூறி அப் பாட்டைப் பாடி முடிக்கும்படி வேண் டினான். அவன்தான் தான் விரும்பிய சரியான ரசிகன் என எண்ணி மகிழ்ந்து முரளிதரன் மேலும் இரண்டு மணி நேரம் பாடி பரமனையும் அவனது குடும்பத்தவரையும் மகிழ்வித்தான். முரளிதரன் இசைக்குத்தான் முதலிடம் அளித்தான். இசையில் பால் அவன் கொண்ட ஈடுபாட்டை கர்வம் என்று கூற முடியாது. அவன் பரமனின் வீட் டில் மூன்று மணி நேரத்திற்கும் அதிக மாகப் பாடியது அவன் இசையை ரசித்துக் கேட்கிறானே என்ற காரணத் தால் தானே யொழிய அவனுக்குப் பிரபுவிடமிருந்து இரண்டு லட்சம் வராகன்களை வாங்கிக் கொடுத்து அவனது ஏழைமையைப் போக்க வேண்டும் என்ற நோக்கத்தில் அல்ல. ஏழைமையைப் போக்குவது அரசின் கடமை என முரளிதரன் கூறியதே இதற்குச் சான்றாகும். எனவே முரளி தரனின் போக்கில் எவ்வித முரண் பாடும் இல்லை'' என்று கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதி லால் அவனது மௌனம் கலையவே. அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.





# இது இன்னொரு வழி!

மலயகிரி மன்னன் மலயகேது. அவன் மனம் களிக்க தினமும் மாலை வேளையில் அண்மையில் ராஜநர்த்தகியாக நியமிக்கப்பட்ட மாதுரியின் நடனத்தை கண்டு களிக்கலானான். இதனாலேயே மறுநாள் அரசாங்க வேலைகளை உற்சாகத்துடன் தன்னால் கவனிக்க முடிகிறது என மன்னன் எண்ணிக் கொண்டிருந்தான்.

சில நாட்களுக்குப் பின் மாதுரி தனக்கு உடல்நலன் சரி இல்லை என்று கூறி மாலையில் மன்னன் முன் நடனமாட வரவில்லை. இதனால் மனம் சோர்ந்து போய் மன்னன் அரசாங்க வேலைகளை கவனிக்காமலேயே இருக்கலானான். இதைக்கண்ட முதலமைச்சர் ஒரு நாட்டியக்காரியின் நடனத்திற்காக மன்னன் ஏங்குவது சரியல்ல என்று எண்ணினார். அதனால் உடல் நலம் குன்றியுள்ள மாதுரியைக் கண்டு பேச ஒருநாளிரவில் அவளது வீட்டிற்குச் சென்றார்.

அப்போது மாதுரியும் அவளது தாயும் பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் என்ன பேசுகிறார்களென்று முதலமைச்சர் மறைந்து நின்று கேட்கலானார். மாதுரியும் தன் தாயாரிடம் ''பார்த்தாயா அம்மா மன்னர் என் நடனத்திற்காக எவ்வளவு ஏங்குகிறார் என்று? என் நடனத்தைப் பார்க்காததால் ஒரு வார காலமாக அரசாங்க வேலைகளில் ஈடுபடவில்லை. எனக்கு ஒன்றும் உடல் நலம் கெட்டு விடவில்லை. நன்றாகவே இருக்கிறேன். இன்னும் சில நாட்களுக்கு மன்னனைத் தவிக்க விட்டுப் பிறகு நான் அவனது நாட்டில் பாதியைக் கேட்டு வாங்கி அதன் அரசியாகி விடுவேன்'' என்றாள்.

அவளது தாயாரோ ''இது சரியல்ல. எங்கள் காலத்தில் கலைக்காக நாட்டியமாடி மன்னர்கள் கொடுக்கும் சன்மானத்தால் திருப்தி அடைந்தோம். நீயோ பாதி நாட்டையே

—எஸ். சோபினி—

அடைய விரும்புகிறாய். இந்தப் பேராசை வேண்டாம். இது உன் அழிவுக்கே வழி காட்டும்'' என்றாள். மாதுரியோ ''நீ கவலைப் படாதே. எல்லாம் என் இஷ்டப் படியே நடக்கும்'' என்று சிரித்துக் கொண்டே கூறினாள்.

இதையெல்லாம் கேட்ட பின் முதலமைச்சர் மாதுரியைச்சந்திக்காமலேயே சென்று விட்டார். அவர் நேரே அரண்மனைக்குப் போய் மன்னனைக் கண்டு ''அரசே! நான் மாதுரியின் வீட்டிற்குப் போய் அவளைக் கண்டு விட்டு வந்தேன். இன்னும் இரண்டு வாரங்களுக்கு அவள் படுக்கையை விட்டே எழுந்திருக்கக் கூடாதென்று வைத்தியர்கள் கூறி விட்டார்களாம். அதனால் மாலை வேளைகளில் நீங்கள் மனம் களிக்க வேறொரு ஏற்பாட்டைச் செய்து விட்டேன்'' எனக் கூறி அங்கு ஒருமூலையில் வைக்கப்பட்டிருந்த சதுரங்கப் பலகையையும் காய்களையும் எடுத்து வந்து அவன் முன் வைத்தார்.

மன்னனோ ''இந்த ஆட்டத்தைச் சரியாக விளையாட எனக்கு வராதே'' எனவே முதலமைச்சரும் ''கவலைப் படாதீர்கள். நான் கற்றுக் கொடுக்கிறேன்'' என்று கூறி சதுரங்க ஆட்டம் பற்றி விவரமாகக் கூறினார்.

மன்னன் நான்கு நாட்கள் முதலமைச்சருடன் சதுரங்கம் ஆடிய பின் அந்த ஆட்டத்தில் நல்ல பிடிப்பு ஏற்பட்டு விட்டது. ஒரு வாரமானதும் மாலை வேளையில் அவனே முதலமைச்சரை அழைத்து சதுரங்கம் விளையாடலானான். அப்போது மன்னன் ''நாள் முழுவதும் அரசாங்க வேலைகளை கவனித்து விட்டு மாலையில் சதுரங்கம் விளையாடுவது நல்ல பொழுது போக்காகவும் உள்ளது. இனிமேல் ராஜ நர்த்தகி மாதுரியின் நடனமெல்லாம் தினமும் மாலையில் தேவை இல்லை. அவளுக்குத் தக்க சன்மானம் அளித்து நீங்களே அவளை நம் நாட்டிலிருந்து வேறு எங்காவது அனுப்பி விடுங்கள்'' என்றான்.

முதலமைச்சரும் அவ்வாறே செய்யவே மாதுரியின் தாய் அவளிடம் ''நீ பேராசைப் படாதே என்று நான் அன்றே உன்னை எச்சரித்தேன். நீயோ கேட்கவில்லை. இப்போது பார் வேறு நாட்டைத் தேடிப் போக வேண்டி இருக்கிறது. இதற்குக் காரணம் உன் பேராசையும் திமிருமே'' என்றாள்.



# பவளத் தீவுகளில்

கருத்து: **மீரா நாயர்** ◆ ஓவியர்: **கௌதம் சென்**




அந்தமான் தீவுகள் முக்கிய நான்கு தீவுக் கூட்டங்களாகப் பிரிக்கப்படுகின்றன. அவை வடக்கு, மத்திய, தெற்கு, சின்ன அந்தமான் தீவுகளாகும்.

வட அந்தமான் தீவுக் கூட்டங்களின் மிக அருகே மக்களே வசியாததும் எரிமலைகள் கொண்ட பாரன் தீவும் நார்கொண்டாகன் தீவும் உள்ளன. அந்தமான் தீவுகளில் இன்றும் வெடித்துப் புகைக்கும் ஒரே எரிமலை இங்கு 608 மீட்டர் உயரமானது. 200 வருட காலம் வெடிக்காத இந்த எரிமலை 1991ல் வெடித்தது.

அந்தமானின் தலைநகர் போர்ட்பிளேர் தெற்கு அந்தமானில் உள்ளது. இங்கு ஹட்டோ துறைமுகத்தில் நிறைய டோல்பின்கள் உள்ளன. போர்ட் ப்ளேரை ஆர்ச்பால்ட் பிளேர் என்ற பொறியியல் பணியாளர் 1789ல் கிழக்கிந்தியக் கம்பெனியின் குடியேற்ற நாடாகத் துவக்கினார்.

இரண்டாவது உலகப் போரின்போது ஜப்பான் இத் தீவுகளை ஆக்கிரமித்தது. சிறிது காலமே அவர்கள் ஆண்டாலும் பல சிறு கட்டடங்களை வசதியான இடங்களில் கட்டினார்கள். பல பழச் செடிகளையும் மரங்களையும் எண்ணெய் வித்துச் செடிகளையும் பயிரிட்டார்கள். இங்கு வசிக்கும் மக்கள் இன்றும் தொடர்ந்து பயிரிட்டு வருகிறார்கள். இவர்கள் ஜப்பானிய மொழியையும் நன்கு பேசுகிறார்கள்.



வீர சாவர்கர்

புரட்சித் தலைவர்களான விநாயக தாமோதர சாவர்கரும் அவரது சகோதரர் கணேஷ் சாவர்கரும் சிறைப்படுத்தப்பட்ட தனி அறைச் சிறைச்சாலை

நாடு விடுதலை பெற்றதும் பல இந்தியர்கள் அந்தமானில் குடியேறி போர்ட் பிளேரில் வசிக்கலானார்கள். இவர்களில் அதிகப்பேர் வங்காளிகள். அடுத்து தமிழர்கள். போர்டபிளேரின் புகழ்பெற்ற இடம் தனி அறை சிறைச்சாலை. இங்கு எல்லாமே தனித்தனி அறைச் சிறைகள். இவை மொத்தம் 698. தனிக் கூடம் என்றெல்லாம் கிடையாது. இது 1886க்கும் 1906க்கும் இடையே ஆங்கிலேயர்களால் கட்டப்பட்டது. முதலில் இங்கு கொடிய குற்றவாளிகளைத் தான் சிறை வைத்து வந்தார்கள். பின்னர் தேச பக்தர்களையும் புரட்சிக்காரர்களையும் ஆங்கிலேயர்கள் சிறை வைத்தனர். இன்று இது ஒரு தேசிய வரலாற்று இல்லமாக ஆக்கப்பட்டுள்ளது.

போர்டபிளேரில் சாதாம் மரமில் என்னும் மிகப் பழைய மரம் அறுக்கும் தொழிற்சாலை உள்ளது. இதன் காட்சியறையில் அபூர்வ மரவகைகள் வைக்கப்பட்டுள்ளன.

ராஸ்தீவு முன்பு ஆங்கிலேயரின் தலைமையகமாக இருந்தது. இது போர்ட் பிளேரிலிருந்து சில கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இங்கு பூகம்பம் ஏற்பட்டதால் இந்த இடம் காலி செய்யப்பட்டது. சிடியா டாபு என்னும் தீவு போர்ட் பிளேரிலிருந்து 26 கி.மீ தொலைவில் உள்ளது. இங்கு பறவைகளைக் காணப் பல சுற்றுலா பயணிகள் வருகிறார்கள். இங்கு மிக அதிக விலை மதிக்கப்படும் பறவைக் கூடுகள் நிறைந்துள்ளன. இவற்றை எடுத்துச் செல்ல பர்மா, மற்றும் பல நாடுகளிலிருந்தும் மக்கள் வந்து முன்பு இங்குள்ள மக்களை அடிமைகளாக்கி தம்மோடு கொண்டு சென்றனர். இதனால் அயல்நாட்டவர் மீது இங்குள்ள மக்கள் வெறுப்பு கொள்ளலாயினர்.



ஒஞ்செஸ்



நிகோபார் குடிசை

நிகோபார் நடனம்

இவர்களில் மிகவும் எரிச்சலும் கோபமும் கொள்பவர்கள் ஜரவர்களும் செந்தனலியர்களுமாவர். சுமார் 200 பேர்களேயுள்ள ஜரவர்கள் தெற்கு, மத்திய அந்தமான்களின் மேற்குக் கடற்கரையில் வசிப்பவர்கள். அவர்கள் வேட்டைக்காரர் போல் கற்கால மனிதர்கள் மாதிரி வாழ்கிறார்கள். செற்தனலியர்கள் மேற்கு செந்தினல் தீவில் வாழ்ந்தார்கள். இவர்கள் வேறு யாரையும் தம்மோடு சேர்த்துக் கொள்வதில்லை. உலகில் தனிப் படுத்தப் பட்டுள்ள கூட்டம் இது.

சிறிய அந்தமானின் கடற்பாறைப் பகுதி களில் ஒஞ்செஸ் என்பவர்கள் வாழ்கிறார்கள். இவர்கள் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே போகிறார்கள். ஆண்களும் பெண்களும் தம் தலைகளை மொட்டை அடித்துக் கொண்டு முகத்தை அலங்கரிக்கக் களி மண்ணைப் பயன் படுத்துகிறார்கள். நண்டின் காலில் புகை யிலையை அடைத்து இவர்கள் புகை பிடித்து மகிழ்கிறார்கள்.

அந்தமான்காரர்கள் இப்போது விவசா யத்தை மேற்கொண்டு விட்டார்கள். தம் பழைய பழங்குடி வாழ்க்கையை விட்டு விட்டார்கள். ஜரவர், செந்தனலியர், ஓஞ்செஸ் அந்தமான் காரர் ஆகிய நான்கு பிரிவினர்களும் நீக்ரோ இனத்தில் கீழ் கருதப் படுகின்றனர்.

அந்தமானையும் நிகோபாரையும் டென் டிகிரி கால்வாய் பிரிக்கிறது. இது மிக வேகமாய் சுழல்களுடன் பாயும் மிக பயங்கரக் கால்வாய்.

ஒரு பழங்குடியினர் வேலை செய்தல்



இந்த இரு தீவுக் கூட்டங்களுக்கும் இடையே 195 கிலோ மீட்டர் தூரம் உள்ளது. இந்த இரண்டின் கலாச்சாரங்களும் வேறாகும். நிகோபார் தீவுகள் சிறியவை. இதன் 19 தீவுகளில் 12ல் மட்டுமே மனிதர்கள் வசிக்கிறார்கள். நிகோபார் தீவுகளில் பெரிய நிகோபார் தான் பெரிய தீவு. நான்கௌரி நன்கு வளர்ச்சியுற்றது. கார்நிகோபாரில் அதிக மக்கள் வாழ்கிறார்கள்.



ஷாம் பென் தாயும் மகளும்

கார்நிகோபாரில் நிகோபாரி பிரிவினரும், ஷோம் பென்களும் வாழ்கிறார்கள். இந்த இரு பிரிவினர்களும் மங்கோலிய இனத்தைச் சேர்ந்தவர்கள். நிகோபாரிகளின் வீடுகள் மூங்கில்கள் நடப்பட்டு அவற்றின் மீது அரை வட்ட வடிவில் கட்டப்படுகின்றன. இவற்றினுள் செல்ல ஏணிகளைப் பயன்படுத்துகிறார்கள்.

நிகோபாரின் தென் கோடியிலுள்ள பெரிய நிகோபாரில் ஷோம் பென்கள் காடுகளில் வாழ்கிறார்கள். இவர்களுக்கு தேன் எடுப்பது கை வந்த கலை. தேன் கூட்டை அணுகு முன் ஒரு வகை இலையை மென்று கொண்டே ஒருவகை மெழுகை உடல் முழுவதும் பூசிக் கொண்டு தேனீக்கள் கொட்டாமல் தங்களைப் பாதுகாத்துக் கொள்கிறார்கள்.

பெரிய நிகோபாரின் மேற்கே மெகோபோட் என்னும் சிறிய தீவு உள்ளது. இங்கு மெகாபோட் என்னும் அபூர்வப் பறவைகள் தம் கூடுகளைக் கட்டுகின்றன. இந்திராமுனை எனப்படும் மிக மில்லியன் முனை வெகுதூரம் தெற்கே இந்தோனேசியாவிற்கு 150 கி.மீ. தொலைவில் உள்ளது. இது இந்தியாவின் தென்முனை. இத்துடன் நம் கடற்கரையோரப் பயணம் முடிவுபெறுகிறது.



மெகாபோட்

**கடற்கரையோரப் பயணங்களை அடுத்து நதிக் கரைப் பயணங்கள் என்ற விறுவிறுப்பான தொடர் ஆரம்பமாகிறது. இது காவேரி நதிக் கரையிலிருந்து ஆரம்பமாகி மற்ற நம் நாட்டு நதிக் கரைகளுக்கு கொண்டு செல்கிறது.**



# ஞாபக மறதி ஏனோ?

மாங்குடியிலுள்ள மாதவனுக்கு மூன்று புதல்வர்கள் இருந்தனர். அவர்களில் இருவர் சுறுசுறுப்பானவர்கள். சட்டென எதையும் புரிந்து கொண்டு செயல்படுபவர்கள். ஆனால் கடைசி மகன் கண்ணன் எதையும் சட்டெனச் செய்யத் தெரியாமல் விழிப்பவன். மற்ற சகோதரர்களைப் போல அவன் படிக்க முடியவில்லை. அதனால் அவர்களைப் போல வாழ்க்கையில் முன்னேறாமல் இருந்தான். அது மட்டுமல்ல, அவன் எதைக் கேட்டாலும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளாமல் மறந்து விடுவான்.

தான் என்ன சாப்பிட்டது என்பதைக்கூட அவன் நினைவில் வைத்துக் கொள்ள முடியாதிருப்பவன். எதையாவது வாங்கப் போனால் எவ்வளவு பணம் கொடுத்தது என்றோ கடைக்காரன் மீதம் எவ்வளவு கொடுத்தான் என்பதோ கூட அவன் அறிய மாட்டான். கண்ணனின் தாய் தந்தையர் அவனது ஞாபக மறதி கண்டு மிகவும் கவலைப் படலானார்கள். அதனால் அவனது பெற்றோர்களே அவனுக்கு படிப்பு சொல்லிக் கொடுத்துப் பார்த்தார்கள். ஞாபக சக்தியை நிலைநிறுத்த அவனுக்கு பல மருந்துகளை வாங்கிக் கொடுத்தார்கள். லேகியம், தைலம் என்று எதுவும் அவனைக் குணப் படுத்தவில்லை.

இவ்வாறாக கண்ணன் பதினேழு வயதை அடைந்து விட்டான். அவனது பெற்றோரின் கவலை அதிகமாயிற்று. கண்ணனின் அண்ணன்கள் இருவரும் மிகவும் நல்லவர்கள். அவர்கள் தம் தந்தையிடம் ''எல்லா சொத்தையும் தம்பி கண்ணனுக்கே எழுதி வைத்து விடுங்கள்'' என்றனர்.

ஆனால் அவர்களது பெற்றோர்களோ ''அவனுக்கு எவ்வளவு சொத்து இருந்தாலும் என்ன பயன்? அவனுடைய ஞாபக மறதி இருக்கும் போது அவனை எவனும் சுலபமாக ஏமாற்றி

—சுப. சங்கரன்—



விடலாமே'' என்றனர். இச்சமயத்திற்கு ஒரு யோகி அந்த ஊருக்கு வந்தார். அவர் எந்தப் பிரச்னையும் தீர்த்து வைப்பவர் என்று பெயர் பெற்றவர். அதனால் அவரைக் கண்டு கண்ணனின் பிரச்னைக்கு வழி காண்பது என மாதவன் எண்ணி அவரைப் பார்த்து கண்ணனைப் பற்றிக் கூறினான்.

யோகியும் மாதவனிடம் ''உங்கள் மகனை ஒருமுறை இங்கு அழைத்து வாருங்கள். அவனது ஞாபக மறதியைப் போக்க என்ன வழி என்று பார்க்கிறேன்'' என்றார். மறுநாளே கண்ணனை அவனது பெற்றோர்கள் யோகியிடம் அழைத்துச் சென்றார்கள். யோகி கண்ணனை ஒரு பூச்செடியினருகே அழைத்துச் சென்றார். அதில் மஞ்சள் நிற மலர்கள் இருந்தன. முட்களும் நிறைய இருந்தன.

அவர் கண்ணனிடம் ''இச்செடியிலிருந்து நீ பனிரெண்டு மலர்களைப் பறிக்க வேண்டும். ஆனால் கையில் முள் குத்தாமல் எச்சரிக்கையுடன் மலர்களை நீ பறிக்க வேண்டும். உன் ஞாபக மறதியை போக்கடிக்க ஒரு நல்ல மருந்தைக் கூறுகிறேன்'' என்றார். கண்ணன் எட்டு மலர்களைப் பறித்து யோகியிடம் கொடுத்தான். அவர் எவ்வளவு மலர்களைப் பறிக்கச் சொன்னார் என்பதை அவன் மறந்து விட்டான். மலர்களைப் பறிக்கும் போது சரியாக கவனிக்காததால் கை விரலில் முள் பட்டு காயம் ஏற்பட்டு விட்டது.

யோகியும் ''நான் எச்சரிக்கை செய்தும் முள்ளைக் கையில் குத்திக் கொண்டு பெரிய ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டு விட்டாயே. இந்த முட்களின் நுனிகளில் விஷம் இருக்கிறது. இதற்குச் சரியான வைத்திய சிகிச்சை அளிக்காவிட்டால் ஒரு வருடத்தில் உன் உயிருக்கே ஆபத்தாக முடியும்'' என்றார். அது கண்ணன் பயந்து ''இந்த விஷயத்தை நீங்கள் முன்பே கூறி இருந்தால் ஜாக்கிரதையாக இருந்திருப்பேன். ஆனால் என் ஞாபக மறதியால் நீங்கள் எச்சரித்ததை மறந்து விட்டேன். என்னை ஏன் மலரைப் பறிக்கச் சொன்னீர்கள்?'' என்று கேட்டான்.

யோகி புன்னகை புரிந்து ''அதெல்லாம் இப்போது எதற்கு? நான் உனக்கு பத்து குளிகைகளைக் கொடுக்கிறேன். தினமும் சாப்பிட்ட பின் உடனேயே சாப்பிட வேண்டும். இரவில் ஒன்று பகலில் ஒன்று என்று விழுங்க வேண்டும். இப்போது பறித்த எட்டு மலர்களை கோவில் அர்ச்சனைக்குக் கொடு. இது போல தினமும் எட்டு

மலர்கள் வீதம் தொடர்ந்து கோவிலில் கொடுத்து வர வேண்டும். இனி மேலாவது கையில் முள்ளைக் குத்திக் கொள்ளாமல் மலர்களைப் பறி. ஒரு வேளை முள் குத்தி விட்டால் உடனே என்னிடம் ஓடி வா. அதற்கு வேறு யாராலும் மருந்து கொடுக்க முடியாது'' என்றார்.

அப்போது கண்ணன் ''சுவாமி! எனக்கோ ஞாபக மறதி அதிகம். அதனால் இவற்றையெல்லாம் என் தாயாரிடம் கூறுங்கள் அவள் கவனித்துக் கொள்வாள்'' என்றான். யோகியோ ''முடியாது. இவ்விஷயம் உனக்கும் எனக்கும் மட்டுமே தெரிந்தாக இருக்க வேண்டும். வேறு யாருக்கும் தெரியக் கூடாது. அப்படித் தெரிந்தால் உனக்கு அளிக்கும் சிகிச்சை பலனளிக்காது. நீ செய்ய வேண்டியதை மறுபடியும் ஒரு முறை கூறுகிறேன். கவனமாகக் கேட்டுக் கொள்'' என்று சொல்லி முன் கூறியதைச் சொல்லி அவனை அவனது பெற்றோர்களோடு அனுப்பினார்.

ஐந்து நட்களான பின் கண்ணன் தன் தாய்த் தந்தையர்களுடன் யோகியைக் காணச் சென்றான். அவன் அவரிடம் ''சுவாமி! நீங்கள் கூறியதை எல்லாம் ஒன்று கூட விடாமல் செய்து முடித்தேன். இன்னும் என்ன செய்ய வேண்டுமெனக் கூறி என் பயத்தைக் குறையுங்கள்'' என்று வேண்டினான். அப்போது அவர் ''நீ செய்ததெல்லாம் எல்லோருக்கும் தெரியும்படி இப்போது நீ சொல். அதனால் உனக்கு ஒரு ஆபத்தும் ஏற்படாது'' என்றார்.

அவனும் ''தினமும் இரண்டு வேளை சாப்பாட்டிற்குப் பிறகு ஒவ்வொரு குளிகை வீதம் ஐந்து நாட்களுக்குச் சாப்பிட்டேன். தினமும் மஞ்சள்



நிற மலர்களில் எட்டைப் பறித்து சிவன் கோவிலில் அர்ச்சனைக்குக் கொடுத்து வந்தேன். மலர்களைப் பறிக்கும் போது ஒரு முள் கூட என் கையில் குத்தி விடாதபடி பார்த்துக் கொண்டேன்'' ஏன்றான். யோகியும் ''பேஷ். ஐந்து நாட்களுக்கு முன் நான் கூறியவற்றையெல்லாம் இன்று ஞாபகப்படுத்திக் கொண்டு சொல்லி விட்டாயே. கண்ணனுக்கு இப்போது ஞாபக மறதி என்பது இல்லை தானே?'' என்று அவர் அவனது பெற்றோர்களிடம் கேட்டார்.

அவர்களுக்கும் ஆச்சரியப்பட்டு ''ஆமாம். தாங்கள் கூறியது சரியே. நீங்கள் கொடுத்த குளிகைகளால் அவனது மூளை சரியாகி ஞாபக சக்தியைப் பெற்று விட்டது'' என்றார்கள். யோகி சிரித்தவாறே ''இதில் என்

குளிகை சக்தி எதுவும் இல்லை. உண்மையில் தவறெல்லாம் உங்களுடையதுதான். அதனால்தான் கண்ணன் இவ்வளவு நாட்களாக, ஞாபக மறதி கொண்டிருந்தான்'' என்றார்.

மாதவனும் ''அது எப்படி சுவாமி?'' எனக் கேட்கவே யோகியும் ''கடவுள் எல்லோருக்கும் மூளையைக் கொடுத்திருக்கிறார். ஆனால் சிலரது மூளை வேகமாகச் செயல்படாமல் மந்த கதியில் செயல்படும். இப்படிப்பட்டவர்கள் எதற்கும் பிறர் உதவியை எதிர்பார்த்துக் கொண்டேதான் இருப்பார்கள். சிறு வயதில் மூளையின் இந்த மந்த நிலை பற்றி அவர்களுக்குத் தெரியாது. இதைக் கண்டுதான் அவர்களது பெற்றோர்கள் கவலைப்படுகிறார்கள். கண்ணனுக்கு மூளை உள்ளது. ஆனால் அது மந்தித்து விட்டது. அதனால் அவனுக்கு ஞாபக மறதி என்பது பழக்கப்பட்டு விட்டது. ஞாபக மறதி உள்ளவனிடம் யாரும் எந்த வேலையையும் செய்யக் கொடுப்பதில்லை. அவனது செயல்களிலுள்ள தவறுகளை அவனுக்கு யாரும் எடுத்துக்கூறுவதில்லை. எல்லோரும் அவனது நிலை கண்டு இரங்குவதால் அவனே குழம்பிப் போகிறான். தந்தையும் இவனது சகோதரர்களும் இவனுக்குத் தேவையானதைச் செய்து விடுகிறார்கள். தாயோ இவனுக்கு வேளா வேளைக்கு சாப்பாடு போட்டு விடுகிறாள். அவனுடைய ஞாபக மறதி அவனுடைய உயிருக்கே ஆபத்து விளைவிக்கும் என்ற பயத்தை அவனது மனதில் உண்டாக்கினால் அவனது மூளை வேலை செய்யத் தொடங்கி விடும். அதைத்தான் நான் செய்தேன். இந்த ஐந்து நாள் பரீட்சையில் தன் மூளை வேலை செய்யுமென நிரூபித்து விட்டான். எனவே உங்கள் சொத்தில் நாலில் ஒரு பங்கை இவனுக்கு நீங்கள் கொடுத்து விடலாம்'' என்றார்.

அப்போது கண்ணன் ''நாலில் ஒரு பங்கா? மூன்றில் ஒரு பங்கு என்று கூறுங்கள்'' எனவே யோகி சிரித்து மாதவனிடம் ''பார்த்தீர்களா? கண்ணன் உங்கள் சொத்தில் தன் பங்கு எவ்வளவு என்பதை எவ்வளவு சரியாகச் சொல்லி விட்டான். எனவே இனி கண்ணனுக்கு ஞாபக மறதி என்பதே இல்லை'' என்றார்.

அது உண்மையாயிற்று!



ஆங்கிலேயர்களை எதிர்த்த வீரர்கள்

5

# கேரளவர்மா பழஸ்ஸி ராஜா

கருத்து: மீரா உக்ரா ✱ ஓவியர்: கௌதம்சென்

பழஸ்ஸி ராஜா எனப்படும் கேரளவர்மா கோட்டயத்தை ஆண்ட அரச குடும்பத்தில் பிறந்தவர். அதிர்ச்சி தரும் செய்தி 1799ல் பழஸ்ஸியை எட்டியது













பணமரக்கோட்டையை 1802 அக்டோபரில் எடச்சன்ன குங்கன் நாயர் தன் வீரர்களுடன் போய்த் தாக்கினார்.


புல் புலீ கோலிலின் வெளியிலிருந்து அறை கூவல் விடுத்தார்.
நாட்டின் புதல்வர்களே! வாருங்கள் ஒன்று சேர்ந்து அடக்குமுறையாளர்களை விரட்டுங்கள் .அவர்கள் அயல் நாட்டவர்கள்.


உடனே 3000 பேர்கள் வந்து சேரவே எடச்சன்ன நாயர் அவர்களோடு மைசூரிலிருந்து மன்னத்தோடிக்கு வந்தார். இதனால் ஆங்கிலேயர்கள் பயப்பட்டனர்.
ஓ! நாம் மற்ற பகுதிகளுடன் தொடர்பு கொள்ள முடியாதே!


தூரத்திலிருந்து வரும் படைகள் வழி மறிக்கப்படலாம். இங்குள்ளவர்களைக் கொண்டு ஒரு காவல் படையை அமைக்கலாம்.


லெப்டினன்ட் கர்னல் கிர்க்பாட்ரிக் 1800 செப்டம்பரில் கூறினார்.
பழஸ்ஸி ராஜாவை எதிர்ப்பதுதான் நமக்குப் பெரும் பிரச்சினை. அவனைத் தோற்கடித்து விட்டால் நிலைமை ச யாகி விடும். மன்னத் தனாலில் அவன கை உயர்ந்துள்ளது.


வையநாடு கோட்டைக்கு 1801ல் கர்னல் ஸ்டீ வென்சன் தலைமையில் ஒரு பெரிய படை அனுப் பப்பட்டது.
அவர்கள் கோட் டையை முற்றுகை இட்டி ருக்கிறார்கள். நாம் காலி செய்ய வேண்டும்


சிரக்கல் காடுகளில் ராஜாவும் அவனது ஆட்களும் ஒளிந்து கொண்டனர்.
எடச்சன்னா! நாம் அவர்களை அடித்து வீழ்த்து வோம். இது நாம் முன்பு செய்தது தான்.


இரு படைகளும் மோதின. சில மாதங்களுக்குப் பின் சங்கரன் நம்பியாரும். அவனது இளைய மகனும் பிடிக்கப்பட்டு தூக்கிலிடப்பட்டனர்.

கர்னல் மக் லாயிட் புதிய காவல் படைக்குப் பயிற்சி அளித்து வலிமை கொண்டதாய் ஆக்கினான். பழஸ்ஸி ராஜா பல போர்களில் தோற்க அவனது படைத்தலைவர்கள் பிடிபட்டுக் கொல்லப்பட்டனர். முடிவில் 1805 நவம்பர் 30ல் தாமஸ் ஹார்வியும் கேப்டன் க்ளாப் ஹாமும் பழஸ்ஸி ராஜாவைப் பிடிக்கக் காடுகளைச் சல்லித்துப் பார்த்தனர்.













மறுநாள் முழு மரியாதைகளுடன் பழஸ்ஸி ராஜாவின் உடல் எரிக்கப்பட்டது. கேரளத்தின் முதலாவது விடுதலைப் போர் வீரனாக அவனைப் பாராட்டிப் பேபர் தன் உயர் அதிகாரிகளுக்கு எழுதினான்.

கலகக்காரனாயினும் அவன் நாட்டின் உண்மையான தலைவர்களில் ஒருவன் என அவனை மதிக்க வேண்டும். எதிரியாகக் கருதலாகாது.





# மகாபாரதம்

கிருஷ்ணர் துவாரகைக்குக் கிளம்பிச் சென்றதும் உபப்லவத்தில் தருமர், விராட மன்னன், மற்றுமுள்ள மன்னர்களெல்லாம் போருக்கான ஆயத்தங்களைச் செய்யலானார்கள். விராடனும் துருபதனும் மற்ற அரசர்களைத் தம் மந்திரிகளுடன் வந்து சேருமாறு தகவல் அனுப்பினார்கள். செய்தி கிடைத்ததும் மன்னர்கள் பாண்டவர்கள் மீது கொண்ட அன்பாலும் விராடனிடம் துருபதனிடமும் கொண்ட மரியாதை காரணத்தாலும் உபப்லவத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

பாண்டவர்கள் போருக்கான ஆயத்தங்களைச் செய்கிறார்கள் என்பதை அறிந்த திருதராஷ்டிரனின் புதல்வர்களும் தமக்கு வேண்டிய மன்னர்களுக்குத் தகவல் கொடுத்து உடனே வரச் சொன்னார்கள். இதனால் எல்லா நாடுகளிலும் விரைவில் பெருத்த போர் ஆரம்பமாகி விடுமென்று மக்கள் பேசிக் கொள்ளலாயினர். படைகளின் நடமாட்டம் வேறு அவர்கள் நினைத்ததை உறுதிப்படுத்தியது.

இச்சமயத்தில் தன் புரோகிதரை துருபதன் கௌரவர்களிடம் பேச தூதாக அனுப்பிய போது ''நீங்கள் நல்ல அறிஞர், நீங்கள் திருதராஷ்டிரனிடம் நியாயத்தை எடுத்துக் கூறுங்கள். விதுரரும் உங்களுக்கு ஆதரவாகப் பேசுவார். நீங்கள் பாண்டவர்களின் பக்கமுள்ள நியாயத்தை எடுத்துக்கூறினால் ஒருவேளை இந்தப் போரைத் தடுக்கலாம். துரியோதனனால் உங்களுக்கு எந்த ஆபத்தும் ஏற்படாது. ஏனெனில் நீங்கள் தூதராகச் செல்கிறீர்கள். உங்கள் வயதிற்கும் அவன் மரியாதை கொடுப்பான்'' என்று கூறினான். புரோகிதரும் தம் சீடர்களை அழைத்துக் கொண்டு ஹஸ்தினாபுரம் போய்ச் சேர்ந்தார். மற்ற மன்னர்களுக்குத் தகவல் அனுப்பியது போலல்லாமல் கிருஷ்ணரைக் காண அர்ஜுனனே துவாரகைக்குக் கிளம்பிச் சென்றான்.

—போருக்கான ஏற்பாடுகள்—



அர்ஜுனன் துவாரகைக்குச் செல்லும் செய்தியை அறிந்த துரியோதனன் துவாரகைக்கு விரைந்து சென்றான். அவன் கிருஷ்ணரைக் காணச் சென்ற போது அவர் கட்டிலில் தூங்கிக் கொண்டிருந்ததால் அவரது தலைப் பக்கம் ஒரு ஆசனத்தை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தான்.

அதற்குச் சற்று நேரத்திற்குப் பின் தான் அர்ஜுனன் கிருஷ்ணரின் அரண்மனைக்குள் வந்தான். கிருஷ்ணர் தூங்குவதைக் கண்டு அவரது காலின் பக்கம் கைகட்டிக் கொண்டு நின்றான். தலைப் பக்கம் உட்கார்ந்திருந்த துரியோதனன் அவனைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தான். கிருஷ்ணன் கண் விழித்ததும் எதிரே நின்ற அர்ஜுனனைத்தான் முதலில் பார்த்தார். அப்போது துரியோதனன் வணக்கம் என்று கூறவே கிருஷ்ணர் திரும்பிப் பார்த்து ''ஓ! நீயும் வந்திருக்கிறாயா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

துரியோதனனும் ''நான்தான் முதலில் வந்தேன். எங்களுக்கும் பாண்டவர்களுக்கும் போர் நடக்கப் போகிறது. அதில் நீங்கள் எனக்கு உதவி புரிய வேண்டும்'' என்றான். கிருஷ்ணரும் ''இந்தப் போரில் நான் ஆயுதம் எடுத்துப் போர் புரியப் போவதில்லை. நான் ஒருவன் ஒரு பக்கமும் என் வீரர்கள் பத்து லட்சம் வீரர்களும் மறு பக்கமும் இருப்பார்கள். எனவே இந்த இரண்டில் ஒன்றை முதலில் அர்ஜுனன்தான் தேர்ந்தெடுக்க வேண்டும். ஏனென்றால் துரியோதனன் அர்ஜுனனுக்கு முன் என்னைப் பார்க்க வந்திருந்தாலும் நான் முதலில் பார்த்தது அர்ஜுனனைத்தான். அர்ஜுனா! நீ என்னைத் தேர்ந்தெடுக்கிறாயா அல்லது என் பத்து லட்சம் வீரர்களையா?'' என்று கேட்டார்.

அர்ஜுனனும் ''எனக்கு வீரர்கள் வேண்டாம். நீங்கள் ஒருவர் மட்டுமே என்னுடன் இருந்தாலே போதும்'' என்றான். அதைக் கேட்ட துரியோதனனின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லாது போயிற்று. ஏனெனில் அர்ஜுனன் பத்து லட்சம் வீரர்கள் தனக்கு வேண்டுமென்று கேட்டு விடுவானோ என்று அவன் பயந்து கொண்டிருந்தான். கிருஷ்ணன் ஒருவன் கிடைப்பதை விட பத்து லட்சம் வீரர்கள் கிடைத்தால் தன் படையில் பலம் அதிகரிக்கும் என அவன் எண்ணியதே அந்த பயத்திற்குக் காரணம்.

அவன் கிருஷ்ணரிடம் தனக்குப்

பத்து லட்சம் வீரர்களைக் கொடுக்கச் சொல்லி விட்டு விடை பெற்றுக் கொண்டு கிருதுவர்மனை காணச் சென்றான். அவன் போரில் கிருதவர் மனின் உதவியைக் கோரவே கிருதவர் மனும் அவனுக்கு ஒரு அக்ஷெளணி சேனையைக் கொடுப்பதாகக் கூறி னான். இவ்விதமாய் தான் நினைத் ததை நல்ல விதமாய் முடித்துக் கொண்டு விட்டதாக எண்ணி மகிழ்ந்து அவன் ஹஸ்தினாபுரத்திற்குச் சென் றான்.



துரியோதனன் எழுந்து சென்றதும் கிருஷ்ணர் அர்ஜுனனிடம் "நான் தான் ஆயுதம் எடுத்துப் போர் புரிய மாட்டேன் என்று கூறினேனே. நீ பெரிய சேனையை விட்டு விட்டு என்னைத் தேர்தெடுத்தது ஏன்?" என்று கேட்டார். அர்ஜுனனும் "அந்த மாபெரும் சேனையையும் நீங்கள் வென்று விடுவீர்களே. அதனால் போர் புரியாத உங்களைத் தேர்ந் தெடுத்தேன். ஆனால் நீங்கள் எனக்கு ஒரு உதவி செய்ய வேண்டும். நீங்கள் என் தேரோட்டியாக இருக்க வேண் டும். அப்படி நீங்கள் இருந்தால் நான் எந்த தேவனையும், அசுரனையும் போரிட்டுக் கொன்று விட முடியும்" என்றான்.

கிருஷ்ணனும் அவனது கோரிக் கையை ஏற்பதாகக் கூறவே அர்ஜு னன் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றான்.

மத்ரதேசமன்னன் சல்லியன் நகுல னுக்கும் சஹதேவனுக்கும் தாய் மாமன். அவனுக்கும் பாண்டவர்கள் அனுப்பிய அழைப்பு கிடைத்தது. அவனும் பாண்டவர்களுக்கு உதவி புரிய ஒரு அக்ஷெளணி சேனையுடன் தன் மகன்களோடு உபப்லவம் நோக் கிச்சென்று கொண்டிருந்தான். இந்தச் செய்தி துரியோதனனுக்குத் தெரிந்து விட்டது. அவன் சல்லியன் செல்லும் வழியில் ஆங்காங்கே அவனும் அவ னது படைகளும் தங்கி இளைப்பாற வும், உண்ணவும் எல்லா ஏற்பாடு களையும் செய்தான்.

சல்லியன் தன்னை வழி நெடுக வர வேற்று உபசரிப்பது பாண்டவர்களின் ஆட்களாகத்தான் இருக்க வேண்டு மென எண்ணி அவற்றை ஏற்றுக் கொண்டான். ஓரிடத்தில் அவன் "ஆஹா! என்ன வசதிகள் இவற்றைச் செய்து கொடுத்தவருக்கு அவர் என்ன கேட்டாலும் நான் கொடுப்பேன்" என்று கூறினான். அப்போது சல்லிய னின் பின்னாலேயே மறைந்து



மறைந்து வந்து கொண்டிருந்த துரி யோதனன் அவன் முன் வந்து வணங்கி நின்றான்.

துரியோதனனைக் கண்ட சல்லி யன் அவனை வரவேற்று உபசரித்து ''துரியோதனா! உன்னை இங்கே கண்டதில் மகிழ்ச்சி அடைகிறேன். என்னைக் காண இவ்வளவு தூரம் வந்திருக்கிறாயே. உனக்கு என்ன வேண்டுமோ கேள். அதை நான் கண் டிப்பாக கொடுக்கிறேன்'' என்றான். அவனும ''மன்னரே! தாங்கள் வரப் போகும் போரில் என் படைகளுக்குத் தலைமை தாங்க வேண்டும்'' என்று பணிவுடன் கேட்டுக் கொண்டான்.

அப்போது, சல்லியனுக்குத் தான் அதுவரை ஏற்ற உபசரிப்புகள் உண்ட உணவு எல்லாம் துரியோதனன் அளித் தது என்று தெரிந்து போய் விட்டது. அதனால்தான் முன்பு கூறிய அவ்வசதி களைச் செய்து கொடுத்ததற்கு அவன் கேட்டதைக் கொடுத்துத் தானே ஆக வேண்டும்.

சல்லியனும் ''சரி போரில் உன் படைக்குத் தலைமை தாங்குகிறேன். இப்போது அவசரமான வேலையாக பாண்டவர்களைப் பார்க்கப் போய்க் கொண்டிருக்கிறேன். நான் தர்மரிடம் பேசிய பிறகு உன் இருப்பிடத்திற்கு வருகிறேன்'' என்றான். துரியோதன னும், ''சரி, தர்மரிடம் பேசி விட்டு விரைவிலேயே வந்து விடுங்கள். எங் கள் வெற்றி உங்களைப் பொறுத்தே இருக்கிறது'' என்று கூறி அவனிடம் விடை பெற்றுக் கொண்டு ஹஸ்தினா புரத்திற்குச் சென்றான்.

இதற்குப் பிறகு சல்லியன் உபப்ல வத்தில் பாண்டவர்கள் இருக்கும் இடத்தை அடைந்தான். தர்மரும் மற்ற பாண்டவர்களும் அவனை மரியாதை யுடன் வரவேற்று தக்க உபசரிப்பு களைச் செய்தார்கள். சல்லியனும் அவர்களைப் பார்த்து ''நீங்களெல் லாம் சௌக்கியமாக இருக்கிறீர்களா? கடவுளின் கிருபையால் வனவா சத்தை நன்கு முடித்து விட்டீர்கள். வனத்தில் அரண்மனையின் சுகங் களை எல்லாம் அனுபவிக்க முடி யாதே. இனி போரில் கௌவர்களை நீங்கள் வென்று சுகமாகத்தான் வாழப் போகிறீர்கள்'' என்றான்.

பிறகு அவன் வழியில் துரியோ தனனைக் கண்டதையும் அவன் எவ் வாறு ஏமாற்றித் தன்னை உபசரித்துப் போரில் உதவ வாக்குப் பெற்றான் என்பதனையும் விவரித்தான். அதைக் கவனமாகக் கேட்ட தர்மர் ''மன்னரே!

நீங்கள் செய்தது மிகவும் சரியே. பழமொழிக்கேற்ப நீங்கள் நடந்து கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் எனக்கு ஒரு உதவி செய்ய வேண்டும். நீங்கள் போர்க்களத்தில் கிருஷ்ணருக்குச் சமமானவர். கர்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் போர் நடக்கும் போது நீங்கள் கர்ணனுக்குத் தேரோட்டும் நிலை வரும். இதில் சந்தேகமே இல்லை. ஏனெனில் அர்ஜுனனுக்கு தேரோட்டியாக இருக்கும் கிருஷ்ணனுக்கு சமமாக கௌரவர் பக்கத்தில் உங்களைத் தவிர வேறு யாருமில்லை. கர்ணனுக்குத் தேரோட்டும் போது நீங்கள் அர்ஜுனனைக் காப்பாற்ற வேண்டும். கர்ணனின் உற்சாகத்தைக் குறைக்க வேண்டும். இதுதான் நான் உங்களை வேண்டிக் கொள்வது'' என்றார்.

சல்லியனும் ''தர்மா! நீ சற்றும் கவலைப்பட வேண்டாம். கர்ணன் எப்படிப்பட்டவன் என்பது எனக்கு நன்கு தெரியும். நயவர்கள் நால்வரில் அவன் ஒருவன்தானே. நான் அவனை மட்டம் தட்டி அர்ஜுனனுக்கே வெற்றி கிடைக்கும்படிச் செய்கிறேன்'' என்றான். தர்மர் தாம் அனுபவித்த கஷ்டங்களை எல்லாம் கூறவே சல்லியனும் ''இது இயல்பே. தேவேந்திரனே பல கஷ்டங்களை அனுபவித்திருக்கிறான். அவற்றை நான் கூறுகிறேன்'' என்று அவை பற்றி விவரிக்கலானான்.

துவஷ்டப் பிரஜாபதி இந்திரனை வீழ்த்த நினைத்து அவனை வெல்ல விஸ்வரூபன் என்பவனைச் சிருஷ்டித்தார். விஸ்வரூபனுக்கு மூன்று தலைகள். இவன் இந்திரப் பதவி தனக்கு வேண்டுமென்று தவம் செய்யலானான். அவனது தவம் முடிந்து பலன் ஏற்பட்டால் பதவி போய் விடுமென்று பயந்து இந்திரன் அவனது தவத்தைக்கலைக்க அப்ஸரகன்னிகைகளை அனுப்பினான். ஆனால் அவர்களால் விஸ்வரூபனின் மனதைக்



கவர்ந்து தம்பால் இழுக்க முடிய வில்லை.

அப்போது இந்திரனே போய் தன் வஜ்ஜிராயுதத்தால் விஸ்வரூபனை அடித்துக் கொன்றான். விஸ்வரூபன் ஒழிந்தான் என்று எண்ணி மகிழ்ந்த போது வேறொரு ஆபத்து அவனுக் குக் காத்திருந்தது.

தான் சிருஷ்டித்த விஸ்வரூபனை இந்திரன் கொன்றான் என்று அறிந்து கடுங் கோபம் கொண்டு துவஸ் டப் பிரஜாபதி விருத்திரன் என்ப வனை சிருஷ்டித்து அனுப்பினார். அவன் புயல் போல தேவலோகத் திற்குப் போய் இந்திரனைத் தாக்கி னான். அவன் இந்திரனைப் பிடித்து விழுங்கி விடடான். இந்திரன் அவன் வயிற்றிலிருந்து தப்பி வெளியே வந்து விருந்திரனின் கைக்கு அகப்படாமல் ஓடினான்.

அவன் தேவர்களை அழைத்துக் கொண்டு விஷ்ணுவிடம் போய் தன் கஷ்டங்களைக் கூறி விருந்திரனைக் கொல்ல ஒரு வழியைச் சொல்லும்படி வேண்டினான். விஷ்ணுவும் ''விருத் திரன் இப்போது இறக்க மாட்டான். அதனால் அவனுடன் நட்புறவு கொள்'' என்றார். அப்போது மகரிஷி களெல்லாம் விருத்திரனைக் கண்டு ''உன்னால் இந்திரனை வெல்ல முடி யாது. அவனாலும் உன்னை வெல்ல முடியாது. எனவே நீங்களிருவரும் நண்பர்களாகி விடுங்கள்'' என்றார் கள்.

விருத்திரனும் அவர்கள் கூறிய படியே இந்திரனின் நண்பனாகி அவ னுடன் நல்லுறவு கொண்டிருந்தான். ஆனால் இந்திரன் சரியான சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு நாள் மாலை அவன் விருத்திரனுடன் கடற்கரையில் உலாவிக் கொண் ருக் கையில் இந்திரன் தன் வஜ்ஜிராயுதத் தால் அவனை அடித்துக் கொன்றான்.

விஸ்வரூபனையும் விருத்தினை யும் கொன்ற பாவம் இந்திரனைப் பிடித்துக் கொண்டது. அதனால் அவன் தன் உருவை இழந்து யார் கண்ணிலும் படாமல் திரியலானான். இதனால் இந்திரப் பதவியில் வேறொருவரை அமர்த்த வேண்டிய தாயிற்று. மகரிஷிகள் நகுஷனிடம் போய் அவனை இந்திரப் பதவியை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினார் கள்.



# அம்புலிமாமா செய்திகள்

**மிக நீளமான விளையாட்டுப் பொருள்**

குழந்தைகளின் விளையாட்டுச் சாமான்கள் என்றால் நம் நினைவிற்கு வருவது பொம்மைக் கார்களும் ரயில்களுமே. யானை, கரடி, பூனை, முயல் என்ற பொம்மைகள் கூடக் குழந்தைகளைக் கவர்கின்றன. குழந்தைகளின் விளையாட்டுப் பொருள்களில் மிகவும் நீளமானது 1994ல் நார்வேயில் 419மீ நீளத்தில் தயாரிக்கப்பட்ட பொம்மைப் பாம்பாகும். இப்போது இதை விட நீளமான சைனா மலைப் பாம்பு பொம்மையைத் தயாரித்து அங்கஹீனர்களின் உதவி நிதி வசூலிக்க சிங்கப்பூர் விமான சர்வீஸ் வைத்துள்ளது.

**மிகப் பழைய ரயில் என்ஜின்**

இந்தியாவிற்கு 95 ஆண்டுகளுக்கு முன் கொண்டு வந்த ரயில் என்ஜினுக்கு பேரிக்வீன் என்று பெயரிட்டார்கள். அதை ஒட்டாமல் நிறுத்திவிட்ட பிறகு டில்லி அருங்காட்சியகத்தில் கொண்டு போய் வைத்தார்கள். இப்போது இதனால் அயல் நாட்டுப் பணத்தைச் சம்பாதிக்கவும் நம் ரயில்வே நிர்வாகம் ஏற்பாடு செய்துள்ளது. இதைச் சரி செய்து மெருகு கொடுத்தும் வைத்திருக்கிறார்கள். தண்டவாளத்தின் மீது நிறுத்தி அதனுடன் இரு பெட்டிகளையும் இணைத்திருக்கிறார்கள். பயணிகள் ஒரு பெட்டியில் அமரலாம். மற்ற பெட்டியில் சாமான்களை வைக்கலாம். அக்டோபரிலிருந்து இதை டில்லியிலிருந்து ஆல்வார் வரை ஓட்டி வருகிறார்கள். வாரம் ஒருமுறை செல்லும் இந்த ரயிலில் பயணம் செய்ய 400 டாலர்கள் (சுமார் 15,000 ரூபாய்) கட்டணம் செலுத்த வேண்டும். டில்லியிலிருந்து ராஜஸ்தானின் ஆல்வாரை இதன் வாயிலாக அடைய 6 மணி நேரமாகிறது. சுற்றுலாப் பயணிகள் இதில் ஏறி சரிஸ்கா வன விலங்குகளின் சரணாலயத்தைக் காணப் போட்டி போடுகிறார்கள். முதல் நாள் கிளம்பி மறுநாள் காலை இந்த ரயில் அவர்களைத் திரும்ப அழைத்து வருகிறது. இந்த என்ஜினை அந்தக் காலத்தில் தயாரித்த நிறுவனம் இப்போது இல்லை. இந்த என்ஜின் இன்னும் கொஞ்ச காலத்திற்கு ஓடுமாம்.




**கி.மு. 4வது நூற்றாண்டின் உலகப் படம்**

சீனாவில் முப்பது ஆண்டுகளுக்கு முன் தாமிரத்தகடில் வரையப்பட்ட உலகப்படத்தை கண்டெடுத்தார்கள். இது கி.மு. 340ல் வரையப்பட்டதாக ஆராய்ச்சி வல்லுநர்கள் கருதுகிறார்கள். ஹேபீமா வட்டத்தில் பீங்பான் பகுதியில் 2300 வருடங்களுக்கு முன் தயாரிக்கப்பட்டுக் கிடைத்த இந்த உலகப் படம் சரியான அளவுள்ள மிகப் பழைய உலகப் படம். இதில் அட்ச ரேகைகளும், தீர்க்க ரேகைகளும் இல்லை.

**தேயிலை விலையின் அதிகபட்சம்!**

சோர்வடையும் போது சூடாக ஒரு கோப்பை தேநீர் பருகி சுறுசுறுப்பை பலர் அடைவதைக் காண்கிறோம். சாதாரணமாக தேயிலை 1 கிலோ ரூ 100லிருந்து ரூ 150 வரை இருக்கும். டார்ஜிலிங்கின் சிறப்பான ஒரு ரகத் தேயிலை கல்கத்தாவில் ஏலம் போடப்பட்ட போது ஒரு கிலோ ரூ 2700 வரை விலை போயிற்று.

**அம்புலிமாமா அனுபந்தம் 111**



**நம் நாட்டுக் கண்கவர் காட்சிகள்**

# புஷ்கர் திருவிழா



ராஜஸ்தானிலுள்ள ஒரு சிறிய நகரம் புஷ்கர். ஆலயங்களுக்கு இவ்வூர் பெயர் பெற்றது. உலகிலேயே மிகப் பெரிய ஒட்டகச் சந்தை ஆண்டு தோறும் இங்கு நடைபெறுகிறது. கார்த்திகைப் பௌர்ணமிக்குப் பத்து நாட்களுக்கு முன்பே ஒட்டகங்கள் கூட்டம் கூட்டமாக இங்கு வந்து சேர்கின்றன. ஒட்டகங்கள் அலங்கரித்து வரிசையாக நிறுத்தப்படுகின்றன. ஒட்டகங்கள் அச்சமயம் நல்ல விலைக்கு விற்கப்படுகின்றன. ஒட்டக ஒட்டப் பந்தயங்கள் கூட நடைபெறுகின்றன.

வேலைப்பாடுகளுடன் கூடிய காலணிகள் சுவரில் தொங்க விடும் திரைகள், படங்கள், பலவித அணிகலன்கள் முதலியன சுற்றுலாப் பயணிகளைக் கவர்ந்து இழுக்கின்றன. நுண்ணிய வேலைப்பாடுகள் கொண்ட மரப் பொம்மைகளுக்கும் தரை விரிப்புகளுக்கும், மண்பாத்திரங்களுக்கும், பாசி மணிகளுக்கும் இந்தச் சந்தை பெயர் பெற்றது. ஒட்டகத் தோலாலான விரிப்புகள், தங்க, பச்சை வண்ணங்கள் பூசப்பட்ட பாட்டில்கள், விளக்குத் தட்டுகள் கவர்ச்சிகரமாக இங்கு விற்பனைக்குக் கிடைக்கின்றன. யந்திர உதவி இல்லாமல் தயாரிக்கப்பட்டவை இவை. நம் கலைஞர்களின் கைத்திறனுக்கு இவை எடுத்துக் காட்டுகள். கலைகளை ரசிப்பவர்களுக்கு பொம்மலாட்டம், நாடகம், நடனம், இசை நிகழ்ச்சிகள் என்றெல்லாம் ஏற்பாடுகள் செய்யவும் படுகின்றன.

புராணகால மன்னர்கள் :

# மருத்

மருத் என்ற மன்னன் சிவபக்தன். பரம சிவனின் அருளால் அவனுக்கு இமய மலையில் ஏராளமாகத் தங்கம் கிடைத்தது. அவன் அதனால் ஒரு யாகம் நடத்த நினைத்தான். வேத மந்திரங்கள் முழங்க யாகம் ஆரம்பமான போது இலங்கையின் அதிபனான இராவணன் அங்கு வந்தான். அவன் ஒவ்வொரு அரசனையும் போருக்கு அழைத்து அவன் தோல்வியை ஒப்புக் கொண்டால் அவனை விட்டு விட்டும், தோல்வியை ஒப்புக் கொள்ளாதவரைப் போரில் தோற்கடித்தும் உலகில் தன் அதிகாரத்தை நிலைநாட்டி வந்தான்.

இராவணன் மருத்தின் யாக சாலையை அடைந்து ''மருத்! மரியாதையாகத் தோல்வியை ஒப்புக் கொள்கிறாயா அல்லது என்னுடன் போரிட்டு எமலோகத்திற்குப் போகப் போகிறாயா?'' என்று கேட்டான். இராவணனின் குரலைக் கேட்டதும் அங்கிருந்த தேவர்கள் பறவைகளாகவும் மிருகங்களாயும் மாறிச் சற்று தூரத்தில் நின்று வேடிக்கை பார்க்கலானார்கள்.

மருத்தும் ''யார் நீ?'' என்று கேட்டான். இதைக் கேட்ட இராவணன் திடுக்கிட்டு ''நான் யாரென்று கூட நீ அறியவில்லையா? என் பெயரைக் கேட்டாலே மூவுலகங்களும் நடுநடுங்குமே. குபேரனின் தம்பி நான். என் அண்ணனை வென்று அவனது புஷ்பக விமானத்தைக் கைப்பற்றிய மாவீரன் இராவணன் நான்'' என கர்வத்தோடு கூறினான்.

''அண்ணனை வென்றதாகக் கூறும் அதமனே! இப்படிக் கூற உனக்கு வெட்கமாக இல்லை? உன் போன்றவர்களை விட்டு வைக்கக் கூடாது. உன்னை நான் எமலோகத்திற்கு அனுப்புகிறேன்'' எனக் கூறி மருத் வில்லையும் அம்புகளையும் எடுத்துக் கொண்டான். அது கண்டு இராவணன் திகைத்துப் போனான். அதற்கு முன் அவனை யாரும் இவ்வாறு பேசினதில்லை. இருவரும் போருக்குத் தயாராகி விட்டார்கள்.

இது கண்டு சம்வர்த்தக முனிவர் குறுக்கிட்டு மருத்திடம் ''நீ யாகத்தை ஆரம்பித்து விட்டாய். யாகம் செய்பவன் கோபமும் ஆத்திரமும் கொள்ளலாகாது. அப்படி செய்வது சாஸ்திர விரோதம். எனவே வில்லையும் அம்புகளையும் கீழே போடு'' என்றார். மருத்தும் முனிவர் சொன்னதைக் கேட்டு வில்லையும் அம்புகளையும் கீழே போட்டான்.

அப்போது அங்கிருந்த அசுரர்களின் குரு சுக்கிராச்சாரியார் இராவணனிடம் ''மருத் தன் வில்லையும் அம்புகளையும் கீழே போட்டு விட்டான். அதனால் உன்னிடம் தோற்று விட்டான் என்பதே ஆகிறது'' என்றார். இராவணனும் திருப்தி அடைந்து அங்கிருந்து சென்றான்.

மருத் தான் ஆரம்பித்த யாகத்தைச் செய்து முடித்தான். அவன் தன் வாழ்நாளில் செலவு செய்தது போக மீதப் பணத்தை இமய மலைக் குகையில் வைத்தான். பிற்காலத்தில் அந்தப் பணம் தருமருக்கு யாகம் செய்யப் பயன்பட்டது.



## உங்களுக்கு தெரியுமா?

### செய்தித் தாள்கள்




தலைநகர் ரோமாபுரியிலிருந்து தொலைவிலிருந்த ஊர்களுக்கு தலை நகரின் செய்திகளை அறிவிக்க கி.மு. 5வது நூற்றாண்டில் செய்திக் கடிதங்கள் அனுப்பப்பட்டன. கி.மு. 60வது ஆண்டில் ஜூலியஸ் சீஸர் இதை ஒழுங்கு படுத்தி 'போரம்' என்ற அமைப்பின் வாயிலாக தினமும் செய்தித் தாள்களை அனுப்ப ஏற்பாடு செய்தார் இதை ஆக்டா டயர்னா என்றனர். நம் இன்றைய தினசரி செய்திப் பத்திரிகையின் வடிவத்தில் முதலில் லண்டனில் 1663ல் 'இண்டலி ஜென்ஸ்' என்ற பெயரில் வெளி வந்தது. அமெரிக்காவில் போஸ்டன் நகரில் 'பப்ளிக் அக்கரென்சஸ்' என்ற பெயரில் 1690ல் வெளி வரலாயிற்று. அமெரிக்க உள் நாட்டுப் போரின் போது மக்கள் தினசரி செய்தித் தாள்களைப் படிக்க ஆர்வம் கொண்டனர். அப்போது அமெரிக்காவில் சுமார் 37 தினப் பத்திரிகைகள் வெளியாகிக் கொண்டிருந்தன.

## வானவில்

### நகரும் மலர்கள்

கடற்கரைகளிலும் ஆழ்கடலுள்ளும் 'அணி மோன்ஸ்' காணப்படுகின்றன. அலை அடிக்காத போது இவை பளபளப்பாக மின்னும். கடலில் அமுங்கி இருக்கும் போது நகரும் மலர்கள் போலத் தென்படுகின்றன. இவற்றை 'ஸீஅனிமோன்ஸ்' என்றாலும் இவை மலர்ச் செடிகளோ அல்லது மலர்களோ அல்ல. உயிரினங்கள். சிறு சிறு புழுக்களைப் பிடித்து இவை தின்கின்றன. முதுகெலும்பு இல்லாமல் கூஜா வடிவில் மேல்புறம் வட்டமாக உள்ளன. இவற்றிற்கு மீசைகள் இருப்பதால் மகரந்தக் காம்புகளுள்ள மலர்கள் போல இவை தோன்றுகின்றன. 'ஸீ அனிமோன்ஸ்' வகையைச் சேர்ந்ததுதான் பவளம். இந்த உயிரினங்களில் கால்ஷியம் எலும்புகளில் இறுகி நமக்குப் பவளங்களாகக் கிடைக்கிறது.



சுதந்திரத்தின் பொன்விழா ஆண்டில் அம்புலிமாமாவின் காணிக்கை

# முதலாவது சுதந்திரப் போர்



(பாரத நாட்டின் பல பகுதிகளிலும் அன்னியர் ஆட்சிக்கு எதிர்ப்புகள் தோன்றின. கான்புர் கலகத்திற்குப் பின் நானாசாகப் மராட்டிய மன்னராக அறிவிக்கப்பட்டு மகுடாபிஷேகம் செய்யப்பட்டார். இதனால் ஊக்கம் பெற்று ஜான்ஸியை சுதந்திர நாடு என ராணி லட்சுமி பாய் அறிவித்து கிழக்கிந்தியக் கம்பெனிப் படைகள் ஜான்ஸி கோட்டையிலிருந்து வெளியேறி விட வேண்டுமென எச்சரிக்கை விடுத்தாள். ஆனால் அவர்கள் அந்த எச்சரிக்கையைப் பொருட்படுத்தவில்லை. ஜான்ஸி மக்கள் கோட்டையை முற்றுகையிட்டு ஆங்கிலப் படைகளைத் தாக்கினார்கள்)

அது மாலை நேரம். இஸ்லாமிய பக்கீர் ஒருவர் தம்மைப் பின்பற்றும் ஆறு பேர்களுடன் கிழக்கு திசையில் சென்று கொண்டிருந்தார். இந்து மத சன்னியாசி ஒருவர் தன் சீடர்கள் புடை சூழ யானை மீதமர்ந்து அந்தப் பக்கிருக்கு எதிரே வந்தார். அவரைக் கண்டதும் பக்கீர் தம் கையை உயர்த்தவே சன்னியாசியும் பதிலுக்குத் தம் கையை உயர்த்தி சைகையாகக் காட்டினார்.

பக்கீர் புன்னகை புரியவே சன்னியாசியும் யானை மீதிருந்து இறங்கி அவரைக் கட்டித்தழுவிக் கொண்டார். இருவரும் தம் ஆட்களை அங்கேயே விட்டு விட்டு சற்று தூரம் போய் ஒரு குன்றின் மீது ஓரிடத்தில் அமர்ந்து எதைப் பற்றியோ விவாதித்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் விவாதித்தது தம் மதக்

கொள்கைகள் பற்றி அல்ல. அன்னியர் ஆட்சிக்கு எதிராக மக்களைத் தட்டி எழுப்பும் முயற்சியில் தாம் பெற்ற அனுபவங்களையும், வெற்றி தோல்விகளைப் பற்றியும் கருத்துப் பரிமாற்றம் செய்து கொண்டிருந்தார் கள். இதற்காக எந்தெந்த மன்னர் களைச் சந்தித்தார்கள் என்பதையும் அவர்களிடம் பேசிய விளைவுகள் யாவை என்பது பற்றியும் அவர்கள் பேசினார்கள். மன்னர்கள் மட்டு மல்லாது பிரமுகர்கள் பலரும் எவ் வாறு உதவுவதாகக் கூறினார்கள் என் பதையும் ஒருவர் மற்றவரிடம் தெரி வித்தனர்.

ஆங்கிலேயரின் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராட ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஜாதி மத வேறுபா டின்றி முன் வந்தனர். அவர்கள் ஒன்று பட்டுச் செயல்பட்டனர். உடை, பழக்க வழக்கங்களில் அவர்கள் வேறு பட்டிருந்தாலும் தாம் இந்தியத் தாயின் மக்கள் என்பதை உணர்ந்திருந்தார்கள். அவர்களுக்குத் தலைமை தாங்கியவர் கள் நானாசாகபும், அஜமல்லாகானும் ஆவர். ஒருவர் ஹிந்து. மற்றவர் முஸ் லிம். அவர்கள் சகோதரர்கள் போலி ருந்து தம்மைப் பின் பற்றி வரும் விடு தலைப் போர் வீரர்களுக்கு முன் மாதிரி யாக விளங்கினார்கள்.

சிறந்த அறிவாளியான அஜ்மல்லா கான் ஒரு ராஜ தந்திரி எனப் பெயர் பெற்றவர். ஆங்கிலத்திலும், பிரெஞ்சு மொழியிலும் புலமை பெற்றவர். நானா சாகபின் பிரதிநிதியாக அவர் இங்கிலாந்திற்குச் சென்று கிழக்கிந் தியக் கம்பெனியின் தலைவர்களுடன் பேசி நிலைமையைக் கூறி இந்தியர் களின் பழக்க வழக்கங்களையும் எடுத் துரைத்தார். ஆனால் தாம் எடுத்துக் கொண்ட முயற்சியில் வெற்றி பெற வில்லை. கம்பெனியின் அக்கிரமங் களை ஒடுக்குவது என்றால் அதற்கு ஒரே வழி அதனை இந்தியாவை





விட்டு வெளியேறச் செய்வதுதான் என்ற முடிவிற்கு அவர் வந்தார்.

இங்கிலாந்திலிருந்து இந்தியா விற்கு வந்த அவர் ஆங்காங்கு புரட்சிக் காரர்களைத் திரட்டி, திட்டங்கள் தீட் டிக் கொடுப்பதிலும் வேண்டிய தக வல்களை அவ்வப்போது அனுப்புவ திலும் நானா சாகப்புடன் கலந்து கொண்டு செயல்படலானார்.

கான்புர் விடுதலையானது, நானா சாகப்பின் மகுடாபிஷேகம் ஆகியவை ஆங்கிலக் கம்பெனியின் மதிப்பையும் கௌரவத்தையும் மிகவும் குறைத்து விட்டன. நானா சாகப்பை எப்படி யாவது அடக்கி விடவேண்டும் என்று எண்ணி கிழக்கிந்தியக் கம்பெனி ஹென்லாக் என்ற படைத் தளப தியை நியமித்தது. கான்புரருகே நதியில் நடந்த கொடிய சம்பவம் பற்றிய தகவல் ஹென்லாக்கிற்குக் கிடைத்தது.

கான்புர் மக்களைப் பழி வாங்க வேண்டுமென்ற நோக்கத்துடன் அவன் ஆயிரம் படை வீரர்களுடனும் ஆயிரக்கணக்கான இந்திய சிப்பாய் களுடனும் வந்து கான்புர் நகரைத் தாக்கினான். கான்புருக்குப் போகும் வழியிலுள்ள ஊர்களிலெல்லாம் புகுந்து வீரர்கள் கொள்ளை அடித் தனர். வீடுகளைத் தீக்கிரையாக் கினார்கள். 'கண்ணில் பட்ட மக்களை யெல்லாம் ஆண் பெண்ணென்ற பாகுபாடும் பாராமல் கொன்று தள்ளினார்கள்.

அவர்கள் பதேஹ்கட் என்ற ஊரை அணுகியதும் ஹென்லாக் அவ்வூரைக் கொள்ளையடித்து தமக்கு வேண்டிய பொருள்களை எல்லாம் எடுத்துக் கொள்ளும்படித் தன் படை வீரர்களுக் குக் கட்டளை இட்டான். படை வீரர் கள் அவ்வாறு செய்ததும் அவ்வூர் மக் களை அவரது வீடுகளில் அடைத்துப் பூட்டி வீடுகளுக்கு நெருப்பு வைத்து அவன் மகிழ்ந்தான்!

ஹென்லாக் பெரும் படையுடன் கான்புரை நோக்கி வந்து கொண்டிருப் பதும் வழியில் அவனது படை வீரர் கள் செய்த அட்டூழியங்களும் நானா சாகப்பிற்குத் தெரிய வந்தது. நானா சாகப் உடனேயே தன் ஆட்களுடன் கான்புரை விட்டு வெளியேறி விட வேண்டுமென்றும் தக்க சமயம் பார்த்து மீண்டும் கான்புரைத் தாக்க வேண்டுமென்றும் அவனது நலனில் அக்கறை கொண்டோர் யோசனை கூறினார்கள். ஆனால் எதிரியைப் போரில் நேருக்கு நேர் நின்று எதிர்த்

துப் போரிட வேண்டுமென்று அவன் தீர்மானித்துக் கொண்டான். ஒரு வேளை போரில் தோற்க நேரிட்டாலும் எதிரியின் பல வீரர்களைக் கொன்றோம் என்ற திருப்தி ஏற்படும் என்றுஅவன் அவர்களிடம் பதில் கூறினான்.

ஹென்லாக்கின் படை கான்புரை அணுகி விட்டது. நானா சாகப்பின் வீரர்கள் நகரின் வெளியேயுள்ள மைதானத்தில் ஒன்று கூடி நின்றார்கள். நானாசாகப் அதற்குத் தலைமை தாங்கி நின்றான். ஆனால் ஹென்லாக் நானாசாகபின் படையைக்கண்டதும் சட்டெனப் பின் வாங்கித் தன் தாக்குதல் முறையை மாற்றினான். தன் படையை அவன் இரு பிரிவுகளாக்கி நகரை இடது புறத்திலிருந்தும் வலது புறத்திலிருந்தும் ஒரே சமயத்தில் தாக்கினான்.

நானா சாகப் இந்த மாதிரி ஹென்லாக் செய்வானென எதிர்பார்க்கவில்லை. சலசலப்பு ஏற்பட்ட தன் படையை ஒழுங்கு படுத்தி ஒரு பக்க ஆங்கிலப் படையை அவன் துணிச்சலுடன் எதிர்க்கலானான். ஆனால் நன்கு பயிற்சி பெற்ற ஆங்கிலப் படை வீரர்களை அவனது வீரர்களால் எதிர்த்துச் சமாளிக்க முடியவில்லை. அவர்களது துப்பாக்கி, பீரங்கித் தாக்குதல்களை எதிர்க்க முடியாது போயினர். ஆங்கிலப் படை அவர்களை அடக்கி விட்டது.

போர்க்களத்தில் துப்பாக்கி குண்டுகளின் புகையும், போர் வீரர்களின் மரண ஓலமும் அடங்கு முன் நாலாபுறமும் இருள் சூழ்ந்தது. நானாசாகப்பைத் தேடிப் பிடிக்கும்படி ஹென்



லாக் தன் வீரர்களுக்குக் கட்டளை இட்டான். ஆனால் அவர்களால் அவனைக் கண்டு பிடிக்க முடியவில்லை. இறந்து போய் கிடக்கும் வீரர்களின் உடல்களுக்கிடையில் அவனது உடல் இருக்குமோ என்று அவர்கள் எல்லா உடல்களையும் புரட்டித் தூக்கிப் போட்டும் பார்த்தார்கள். அதுவும் பயனளிக்கவில்லை. நானாசாகப் ஏராளமான பணத்தோடு தப்பி ஓடி விட்டான் என்று ஹென்லாக்கிற்குத் தெரிந்து போயிற்று.

இதனால் ஹென்லாக் ஆத்திரப்பட்டு கான்புர் மக்களைப் பழிக்குப் பழி வாங்கலானான். ஆயிரக்கணக்கில் மக்களைக் கைது செய்து கம்பெனியின் கோட்டைக்குள் கொண்டு சென்றான். சிறைப்பட்டவர்களில் மத குருமார்கள், புரோகிதர்கள், அர்ச்சகர்

கள், வியாபாரிகள் என்று பல பிரமுகர்கள் இருந்தனர். கோட்டைக்குள் முன்பு பலியான ஆங்கிலேயர்களின் ரத்தக்கறைகள் ஆங்காங்கே இருந்தன. அவற்றை நக்கி சுத்தப்படுத்தும் படி தான் சிறைப்பிடித்து வந்தவர்களை அவன் நிர்ப்பந்தப்படுத்தினான்! அவர்கள் அவ்வாறு செய்தும் அவர்களை விடுதலை செய்யாமல் கொன்று விட்டான்.

வீலரின் மரணத்திற்காக ஹென்லாக் அப்பாவி மக்களை இவ்வாறு இம்சித்துப் பழி வாங்கினான். நானா சாகபின் வீரர்களை தூக்கிலிட்டான். ஆனால் மரணத்தின் வாயில் இருந்த போதிலும் அவர்கள் தம் சுதந்திர வேட்கையை வெளிப்படுத்தி கோஷங்கள் போட்டவாறே உயிர் நீத்தார்கள்! நானாசாகப்பின் ஆட்சியில் நீதிபதியாகப் பணியாற்றிய ஒருவரைச் சிறைப்படுத்தி ஹென்லாக் அவருக்கு மரண தண்டனை விதித்தான். அவர் அதனால் மனம் கலங்கி விடவில்லை. புன்னகையுடன் மாபெரும் வேள்வியைச் செய்தது போல அதனை ஏற்றார். இம்மாதிரிக் கொள்கைப் பிடிப்புள்ள பலர் ஹென்லாக்கால் தூக்கிலிடப்பட்டனர்.

கான்புரைக் கைப்பற்றி விட்டதற்காக ஆங்கிலப் படை வீரர்கள் ஆனந்தக் கூத்தாடினார்கள். இனி தம்மை எதிர்க்க யாருமே இல்லை என்று எண்ணி அவர்கள் மகிழ்ச்சியுடன் குடித்துக் கும்மாளம் போட்டுக் கொண்டிருந்தார்கள். இச்சமயத்தில் அவர்களுக்கு வேதனை தரும் செய்திகள் கிடைக்கலாயின. டில்லியில் கலவரம் மூண்டு விட்டது. லக்னௌ நகரில் ஒரே கொந்தளிப்பு! பீகாரில் ஆங்காங்கே கலகங்கள் தலை தூக்கின!!

இந்தியாவிலும் இங்கிலாந்திலும் இனி கம்பெனியின் ஆட்சி வெகு நாட்களுக்கு இந்தியாவில் இராது என்ற எண்ணம் வலுப்படலாயிற்று. இதற்குக்காரணமில்லாமல் போகவில்லை. ஆங்கில ஆட்சியை ஒழிக்க வேண்டுமென இந்திய சமஸ்தானாதிபதிகள் ஒரே சமயத்தில் நினைத்திருந்தால் இந்திய சிப்பாய்கள் புரிந்த கலகம் அப்போது இந்தியாவிற்கு சுதந்திரம் கிடைக்கச் செய்திருக்கும். ஆனால் அவ்வாறுதான் நடக்கவில்லையே.

**(தொடரும்)**






# மானம் போயிற்று!

ஒரு ஊரில் கைலாசநாதன் என்ற பெரும் பணக்காரன் இருந்தான். அவன் பார்ப்பவர்களுக்கெல்லாம் தாரான மனம் கொண்டவன் போல நடித்து வந்தான். ஆனால் உண்மையில் வடி கட்டின கஞ்சன் அவன். இதை ஊரார்அறியவில்லை.

அவன் தினமும் தெருவில் யாரும் தென்படாத நேரம் பார்த்து ''யாராவது என்னுடன் சாப்பிட வரலாம்'' என்று உரக்கக் கூவி விட்டுச் சட்டென உள்ளே போய் விடுவான். யாராவது சாப்பிட வந்து விடுவானே என்ற பயமே அதற்குக் காரணம். ஊராரோ தினமும் அப்பணக்காரன், அவ்வாறு கூவுவது கேட்டு ''ஆஹா! என்ன தாராளமனது'' என்று பாராட்டி வந்தார்கள்.

ஒருநாள் பழனி என்ற ஏழை தன் மனைவியுடன் அந்த ஊருக்கு வந்தான். அந்த ஊரில் தனக்கு ஏதாவது வேலை கிடைக்குமா என்று அவன் அலைந்து திரியும் போது ஊரார் அவனிடம் ''நீ போய் கைலாசநாதரைப் பார். அவர் தாராள மனம் கொண்டவர். கண்டிப்பாக உனக்கு ஏதாவது வேலை போட்டுக் கொடுப்பார்'' என்றார்கள்.

பழனியும் கைலாச நாதனைக் காணச்சென்றான். அப்போது அந்தப் பணக்காரன் ஊர்ப் பிரமுகர்கள் பலருடன் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தான். பழனி அவனை வணங்கி தனக்கு ஏதாவது வேலை போட்டுக் கொடுக்கும்படி வேண்டவே கைலாசநாதனும் ஜம்பமாக ''உனக்கு இன்று முதல் என் வீட்டில் வேலை'' எனக் கூறி சுற்றிலுமுள்ளவர்களை ஒரு முறை பார்த்தான். அவர்களும் ''ஆஹா! என்ன தாராளமனது உங்களுக்கு'' என்று அவனைப் பாராட்டினார்கள்.

கைலாசநாதன் பழனியும் அவன் மனைவியும் வசிக்கத் தன் வீட்டின்

—சங்கர சுவாமிநாதன்—



பின்புறமுள்ள ஒரு குடிசையைக் கொடுத்தான். அவர்கள் இருவரையும் தன் வீட்டு வேலைகளைச் செய்யச் சொல்லி மிக மிகக் குறைவான சம் பளத்தைக் கொடுத்தான். அந்தப் பணத்தைக் கொண்டு போதிய உண வுப் பொருள்களை வாங்கி வயிறு நிறைய சாப்பிட பழனியால் முடிய வில்லை. அதனால் கிடைக்கும் பணத் தில் அரிசிக் குருணை வாங்கி கஞ்சி காய்ச்சி அதில் உப்பைப் போட்டு இரண்டு பச்சை மிளகாய்களைக் கடித்து குடித்துக் கொண்டு பழனியும் அவன் மனைவியும் காலம் கழிக்கலா யினர்.

ஒருநாள் பழனியின் மனைவி தன் கணவனிடம் ''இதென்ன வேலை! வேறு எங்காவது வேலை செய்தால் வயிறு நிறையவாவது சாப்பிட லாமே. இந்தக் கஞ்சனை தாராளப் பிரபு என எண்ணி ஏமாந்து விட் டோம்'' என்றாள். பழனியும் ''ஆமாம். இவனிடம் நான் முதலில் சம்பளம் பற்றிப் பேசிக் கொள்ளா தது என் தப்புதான். நாம் இங்கிருந்து போகு முன் இவனுக்கு நல்ல பாடம் கற்பித்து விட்டே போக வேண்டும். அதற்கு நான் ஒரு வழி செய்கிறேன்'' என்றான்.

அன்று முதல் அவன் கஞ்சி குடிக்கு முன் தன் மனைவியிடம் ''பாயசம் தயாராகி விட்டதா? கொஞ்சம் சர்க் கரையைக் கூடவே போடு. இரண்டு பச்சை வாழைப் பழங்களையும் வை'' என உரக்கக் கூறலானான். அவன் மனைவியும் கஞ்சியையும் உப்பையையும், இரண்டு பச்சைமிள காய்களையும் கொண்டு வந்து அவன் முன் வைத்து வரலானாள்.

பழனி இப்படிக் கூறி வந்தது கைலாசநாதனின் மனைவியின் காதில் விழுந்தது. அவள் அந்த வீட்டில் அடி எடுத்து வைத்த நாள் முதல் ஒருநாள் கூட பாயசம் வைத்துச் சாப்பிட்டதே இல்லை. மிகக் குறைந்த சம்பளம் பெறும் பழனி மட்டும் எப்படி தின மும் பாயசமும் பழமும் சாப்பிடுகி றான் என்று நினைத்து அவள் ஆச் சரியப்படலானாள். இதை அவள் ஒரு நாள் கைலாசநாதனிடமும் கூறினாள். அதைக் கேட்டு அவனும் ஆச்சரியப் பட்டான். தான் கொடுக்கும் சொற்ப சம்பளத்தில் பழனியால் எப்படிப் பாயசமும் பழங்களும் தினமும் சாப் பிட முடிகிறது என்று அவனிடமே கேட்பது என்று கைலாசநாதன் தீர் மானித்துக் கொண்டான்.

மறுநாள் பழனி வேலை செய்து கொண்டிருக்கையில் கைலாசநாதன் அவனருகே போய் நின்று அவனிடம் ''என்னப்பா! உனக்கு இங்கே எந்தக் குறையும் இல்லைதானே?'' என்று கேட்டான். பழனியும் ''எங்கள் வாழ்வில் குறை என்பது இல்லாமலா இருக்கும்?'' என்றான். கைலாசநாதனும் ''உனக்குக் குறையா? நீதான் தினமும் பாயசமும் பழங்களும் சாப்பிடுகிறாயே. இது எனக்குத் தெரியாது என்றா நினைக்கிறாய்?'' என்று சிரித்தவாறே கேட்டான்.

பழனியும் ''ஓ! அதுவா? எம் போன்றவர்களுக்கு அதுதானே சொர்க்கலோக சுகம் போல உள்ளது. என் மனைவி நான் குடிக்கும் பாயசத்தைத் தயாரிப்பதில் கைதேர்ந்தவள்'' என்றான். கைலாசநாதனும் ''அவள் மிகக் குறைந்த செலவில் பாயசம் தயாரிக்கிறாளா?'' என்று எண்ணிக் கொண்டான்.

சில நாட்களுக்குப் பின் கைலாசநாதனின் மகளைப் பெண் பார்த்து திருமணம் நிச்சயிக்க வெளியூரிலிருந்து ஒரு பணக்காரரும், அவரது மகனும் அவரது உறவினர்களுமாக இருபத்தைந்து பேர்கள் வந்தார்கள். இவ்வளவு பேர்களுக்கும் பாயசத்துடன் விருந்து சாப்பாடு போடுவதா என்று எண்ணி கைலாசநாதன் திகைத்துப் போனான். சரி, விருந்து செலவை எப்படியெல்லாம் குறைக்கலாம் என்று யோசித்த போது பழனியின் மனைவியைக் கொண்டு மிகக் குறைந்த செலவில் பாயசத்தைத் தயாரித்து விடுவது என்று அவன் முடிவு செய்தான்.



அவன் பழனியை அழைத்துக் கொஞ்சம் பணம் கொடுத்து ''நீ கடைக்குப் போய் பாயசத்திற்கு வேண்டிய சாமான்களை வாங்கி வந்து உன் மனைவியிடம் கொடு. அவளும் நீ தினமும் சாப்பிடும் பாயசம் போலத் தயாரித்துக் கொடுக்கட்டும். அதை வந்த விருந்தாளிகளுக்கு நீ பரிமாறு. இன்று நீயும் உன் மனைவியும் என் வீட்டிலேயே பாயசத்தையும் சாப்பிடலாம்'' என்றான்.

பழனி இந்த மாதிரி ஒரு வாய்ப்பு கிடைக்குமா என்று தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். பணத்தை வாங்கிக் கொண்டு அவன் கடைக்குப் போய் அரிசிக் குருணையையும் உப்பையும் வாங்கி வந்தான். பழனியின் மனைவியும் கஞ்சி தயாரித்து எடுத்து வந்தாள்.

பெண் பார்க்கும் படலம் முடிந்தது. கைலாசநாதன் எல்லோரையும் விருந்துண்ண உட்கார வைத்தான். பழனியும் அவனது மனைவியும்தான் உணவு பரிமாறலானார்கள். கைலாச நாதனும் அவன் மனைவியும் ஒரு ஓரமாகக் கை கட்டி நின்று கொண்டிருந்தார்கள். கைலாசநாதன் பழனியிடம் ''எல்லோருக்கும் முதலில் பாயசம் பரிமாறு'' என்றான்.

பழனியின் மனைவி கஞ்சிப் பாத்திரத்தை எடுத்து வந்து ஒவ்வொருவர் இலையிலும் கஞ்சியைப் பரிமாற, பழனி உப்பையும் பச்சை மிளகாய்களையும் வைத்தான். அது கண்டு விருந்தாளிகள் முகத்தைச் சுளித்தார்கள். இதைக் கண்டு வெளியூர் பணக்காரரும் அவரது மகனும் கடுங் கோபம் கொண்டார்கள். அச் சமயத்தில் கைலாசநாதன் ''உங்களுக்காக பாயசம் சிறந்த முறையில் தயாரிக்கப் பட்டுள்ளது. சாப்பிடுங்கள்'' என்று இலைகளைப் பாராமலே கூறினான்.

பணக்காரரும் அவரது மகனும் ''இதுவா பாயசம்?'' என்று இரைந்து எழுந்து விட மற்றவர்களும் தம் இலைகளிலிருந்து எழுந்தனர். பணக்காரரும் ''ஏய் கைலாசம்! இப்படி அவமானப் படுத்தவா நினைத்தாய்? உன் சம்மந்தமே வேண்டாம்'' என்று கூறித் தம் உறவினர்களோடு உடனே கிளம்பிப் போய் விட்டார். இந்த சமாசாரம் ஊர் முழுவதும் பரவி அங்கு கூட்டமும் கூடி விட்டது.

கைலாசநாதன் பழனி மீதும் அவன் மனைவி மீதும் கடுங் கோபம் கொண்டு ''என்னடா இது? இந்தக் கஞ்சியா பாயசம்?'' என்று கேட்டான். ஊராருக்கு விஷயம் புரிந்து விட்டது. பழனியோ நிதானமாக ''நீங்கள் தானே நாங்கள் தினமும் சாப்பிடும் பாயசத்தைத் தயாரிக்கச் சொன்னீர்கள். நாங்கள் சாப்பிடும் கஞ்சிதான் எங்களுக்குப் பாயசம். நீங்கள் கொடுக்கும் சம்பளத்தில் இந்தக் கஞ்சி தயாரித்துத்தான் எங்கள் வயிற்றை நிரப்பிக் கொள்கிறோம். இந்தப் பணத்தில் பாயசமா வைத்துச் சாப்பிட முடியும்?'' என்றான்.

அங்கு கூடியிருந்த ஊரார் ''ஓகோ! இதுதான் பணக்காரரின் உண்மையான தோற்றமா?'' என்று கூறி பலமாகச் சிரித்தார்கள். கைலாசநாதன் அவமானத்தால் தலை குனிந்து நின்றான்.



# அதிபுத்திசாலி!

ராஜாராமன் தன் மகன் கோபாலனை மிகவும் செல்லம் கொடுத்து அதிகமாகப் படிக்க வைக்கவில்லை. ஏதோ கொஞ்சம் படித்து விட்டுப் படிப்பை அவனே நிறுத்தி விட்டான். அவனது தந்தையோ "இப்படியே இருந்தால் நீ எப்படி என் போல முன்னுக்கு வருவாய்?" என்று கேட்டான். கோபாலனும் "இந்தக் காலத்திலும் மகன் தந்தையை விடக் கெட்டிக்காரனாகத்தான் இருக்கிறான். அது தெரியுமா உங்களுக்கு?" என்று கூறினான்.

தந்தையும் "அது எப்படி என்று சொன்னால் உன்னைப் பற்றி இனி எப்பவும் கவலைப்பட மாட்டேன்" என்றான் கோபாலனும் "சரி. ரகுவம்சம் என்ற சமஸ்கிருத காவியத்தை எழுதியவர் யார்?" என்று கேட்டான். தந்தையும் "ஏன்? காளிதாசர்தான்" எனவே. "சாகுந்தலத்தை யார் எழுதினார்?" என்று கோபாலன் கேட்டான். தந்தையும் "அதையும் காளிதாசரே எழுதினார்? எனவே கோபாலன் "மேக தூதத்தை எழுதியது யார்?" என்று கேட்டான். "அதுவும் காளிதாசரே" எனத் தந்தை கூறவே கோபாலனும் "பார்த்தீர்களா?" இவற்றை எல்லாம் காளிதாசர் எழுதிப் புகழ் பெற்றார். ஆனால் அவரது தந்தை ஒன்றைக் கூட எழுதிப் பெயர் பெறவில்லையே. இதிலிருந்தே மகன் தந்தையை விடக் கெட்டிக்காரன் என்று புரியவில்லையா?" என்றான்.

ராஜாராமன் தன் மகனின் அதிபுத்திசாலித்தனத்தைக் கண்டு தலையில் அடித்துக் கொண்டார்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1998 மே மாத இதழில் வெளியிடப்படும்.



MAHANTESH C. MORABAD



MAHANTESH C. MORABAD

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ மார்ச் 25-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை-600 026.**

## டிசம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **சிறகாய் விரித்தால் சிந்தை மகிழும்.**

இரண்டாவது போட்டோ : **அருகில் பார்த்தால் அகமே மகிழும்.**

பரிசு பெற்றவர் : **திரு. கே. குறளமுதன், இராஜபாளையம்.**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., Chandamama Buildings, Chennai - 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, 188, N.S.K. Salai, Vadapalani, Chennai - 600 026 (India) Editor : NAGI REDDI.

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள் அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள் அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ் அல்லது தெலுங்கு

தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும் உணரச் செய்யும்

**சந்தாத் தொகை (ஆண்டிற்கு)**

ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 129.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 276.00

பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 135.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 276.00

பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ் என எழுதி

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ், வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்

Regd. No. M. 4863/97
Registrar of News Papers, India. RN 1095/57